உ

# சிவஞான போதம்.

## வேதாந்தப் பிரகாசம் என்னும் உரை.

பிரஞ்ஞானம் பிரஹ்மம்

அயமாத்மா ப்ரஹ்மம்



அஹம் ப்ரஹ்மாஸ்மி

தத்துவமஸி

ஸ்ரீ சின்மயானந்த சுவாமிகள்,
பிரஹ்மானந்த சுவாமிகள் மடம்,
மதுரை.

ஹேவிளம்பி வருஷம்
1957.

உ
சிவமயம்.

இரௌரவ ஆகமத்துள் உள்ள

# சிவஞான போதம்.

திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்ட தேவரால்
மொழிபெயர்த்தருளிய தமிழ்ச்சூத்திரமும்

மதுரை ஸ்ரீ பிரஹ்மானந்த ஸ்வாமிகள்
மடத்தின் தலைவரும்
வீர. சோமசுந்தர சுவாமிகள் மாணாக்கரும்
சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்டருமாகிய
ஸ்ரீ சின்மயானந்த சுவாமிகள் அவர்களால்
இயற்றப்பட்ட

# வேதாந்தப் பிரகாசம்

என்னும் உரையும்

# முகவுரை

மலர்தலை யுலகில் தலை சிறந்து விளங்கும் மக்களே, அறியப்படும் பொருள்களெல்லாம் உலகு, உயிர், இறை என மூன்றாக அடங்குமெனவும் அவற்றுள் உலகினியல்பு இஃதெனவும் உயிர்களினியல்பு இஃதெனவும் இறைவனியல்பு இஃதெனவும் உயிர்கட்கு **'மாற்ற மனங்கழிய நின்ற'** இறைவனுடன் இவ்வகையில் இயைபுண்டெனவும், ஆய்ந்து மெய்ம்மை காணுதற்கும், அங்ஙனம் ஆய்ந்து மெய்ம்மை காணுதற்கு நெஞ்சத் தூய்மையும், ஒருமையும், வேண்டுமாதலின், அவற்றைப் பெறுதற்கும், அவற்றை யெய்தி மெய்ம்மை கண்டு இன்னலொழிவும், இன்ப அடைவுமாகிய வீடு பேறு எய்துதற்கு முரியவராவர் என்று திருவுளம் பற்றி அலர் தரு தண்ணளிப் பெருக்கினால் அவற்றை விளக்குதற்கு இறைவனும் அவனருள் வழிப்பட்ட சான்றோர்களும் அருளிய நூல்கள் பல. அந்நூல்கள் பலவற்றுள்ளும் 'முண்டக்' முதலிய பத்துபநிடதங்களும், அவற்றின் சாரமாகிய பிரம சூத்திரமும், பகவற்கீதையும், சாலச் சிறந்தனவாகும் என உயர்ந்தோராற் கொள்ளப் பட்டன. இவை மறையும் மறை வழிப்பட்டனவுமாகும்.

இனி இவைகளோடு ஒருங்கு எண்ணத்தக்கதாகப் பன்னிரண்டு நூற்பா அளவில் **'சிவஞான போதம்'** என்பதொரு அருமந்த நூலுண்டு. இது ஆகமத் தெளிவாகும். ஆகமமும் **'மன்னு மாமலை மகேந்திர மதனில் துன்னிய ஆகமந் தோற்றுவித்தருளியும்'** என்பது முதலிய திருவாய் மொழிகளினால் இறைவனால் அருளிச் செய்யப்பட்டது என்பது தேற்றமாகும்.

மேற் கூறப்பட்ட உபநிடதங்களும், பகவற்கீதையும், பிரம சூத்திரமுமாகிய பிரஸ்தானத் திரயத்திற்கும், **'சங்கராச்சாரியனுங் குருவா லோப்பரிய** பாடியமொன் றுரைக்கப்பட்டது. (சிவப் பிரகாச சுவாமிகள்) என்று ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர்கள் புகழும்படி சங்கர பகவத் பாத சகத்குருபரால் இணையற்ற பாடியங் (உரை) கள் இயற்றப் பட்டன. அத்வைத பரமாக அவர்கள் பாடிய மியற்றவே இராமாநுஜர், நீலகண்டர், மாத்துவர் முதலிய சான்றோர்

களும் பின்னர் தங்கள் தங்கள் கொள்கைகளுக் கேற்பப் பாடியங்களியற்றினர்.

அதுபோலச் சிவஞான போதத்திற்கு வடமொழியிலேயே ஓரிய உரை அத்வைத பரமாக வித்தியாரணிய சுவாமிகளாற் செய்யப்படவே சிவாக்கிரயோகிகளா லவர்தங் கொள்கைக் கனுசாரமாக ஓருரை செய்யப்பட்டது. வடமொழியிலுள்ள அச்சிவஞான போதத்தைத் ஸ்ரீமெய்கண்ட தேவர் தமிழில் பன்னிரண்டு நூற்பாவாக மொழி பெயர்த்து யாத்து அதற்கு வார்த்திகப் பொழிப்பும் உதாரண வெண்பாக்களும்வகுத்தனர். பின்னர், அச்சிவஞான போதத்திற்குப் 'பாண்டியப் பெருமாள்' என்பவர் முதலியோர் சைவ சித்தாந்த பரமாக வுரையியற்றியுள்ளார்கள். அவ்வுரைகளுள் சிறந்தனவாகக் கருதப் படுவன. பல மாதவச் சிவஞான சுவாமிகளாற் செய்யப்பட்ட சிற்றுரையும் பேருரையும் (பாடியமும்) ஆகும்.

இனிச் '**சிவஞான போதம்**' என்னும் நூல் தமிழிலேயே தனியே தரப்பட்டது மொழி பெயர்க்கப்பட்டதன்று என ஒரு திறத்தார் வலியுறுத்துகின்றனர்.

சிவஞான போதத்தை அத்வைத ஸ்தாபனுச்சாரியாகிய தத்துவராய சுவாமிகள் தம் '**பாடுதுறை**'யில் புகழ்ந்திருத்தலாலும் வேத சித்தாந்தத்திற்கு மாறாக ஆகமமொன்றைச் சித்தாந்தம் செய்யுரதென்னுந் துணிவுண்மையாலும் அத்வைத பரமாக ஸ்ரீவித்யாரண்ய சுவாமிகளுரை யியற்றினாற் போலவே தமிழிலும் அத்வைத பரமாக, சென்னை ஸ்ரீ கோ. வடிவேலு செட்டியாரவர்கள், ஈசூர் சச்சிதானந்த சுவாமிகள் மாணக்கர் ஸ்ரீபழனிச்சுவாமிகள் கோயிலூர் சிவானந்தசுவாமிகள்.கோயில் பட்டி ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள்; கோயிலூர் மரபு சிதம்பரம் ஸ்ரீ சித. திருநீலகண்ட சுவாமிகள் முதலியோர் உரையியற்றியிருக்கின்றனர்.

---

**பிரம சூத்திர முதலியவற்றிற் நூல்களின் கருத்துணர்ந்துரை யுரைத்தார் சங்கரரென்பதை, 'வியாசதாற்பரியம்' முதலியவற்றாற் றெளிந்தனராதலின் 'ஒப்பரிய பாடியம்' எனவும் அவரே உலகிற் குண்மை யுரைத்து மயலகற்றவந்தவரென உணர்ந்தமையின் குருவால்" எனவும் விளங்கப் பாடினர்.**

இனி வடமொழிச் சூத்திரத்திற்குத் தமிழுரையொன்று ஸ்ரீ தஞ்சாவூர், குப்புசாமி ராஜு. அவர்களென்னும் பிரமானந்த சுவாமிகளா லெழுதப்பட்டிருக்கின்றது.

அத்வைத பரமாக எழுந்த இவ்வுரைகளுட் சில விரிவாகக் காணப்படுவதாலும் சுருங்கிய அளவிலுள்ளனவும் கற்றுவல்லவர்க்கேயன்றி எல்லார்க்கு மெளிதிற் புலப்படாமையானும் எல்லாரு மெளிதினுணரும்படி தற்போது மதுரை கோயிலூர் மரபு ஸ்ரீ பிரமானந்த சுவாமிகள் மடத்துத் தலைவராக விளங்குகின்றவர்களும் அத்வைத சித்தாந்தத்தை எவரும் எளிதினுணரும்படி நாடோறு மெடுத்துரைக்குஞ் சீலமுடையவர்களுமாகிய ஸ்ரீ சின்மயானந்த சுவாமிகளால் எளிய நடையில் பதவுரையும் வேண்டுமிடங்களில் விளக்கமும் இலக்கணக் குறிப்பு முள்பட ஒரு அறியவுரை முன்னோர் கொள்கையுடன் முரணுதல் முதலிய குற்றங்க ளற்றதாக இயற்றப்பட்டிருக்கின்றது.

இவ்வுரை மிக இன்றியமையாத தொன்றாகலான் எவரும் பெற்றுப்படித்து உண்மை யுணர்ந்திறவா வின்ப மெய்த வேண்டுகின்றனன்.

இங்ஙனம்,

**பண்டித. சித. நாராயணசாமி**

அறுபத்துமூவர் மடம்

**திருவையாறு**



ஸ்ரீ சின்மயானந்த ஸ்வாமிகள்

உ

ஓம் தத் சத்

# புனைந்துரை

(காப்பு)

பழுதையிற் றோன்றும் பாம்பு நிகர்த்த வைம்பூ தப்பாவம்
முழுவது மன்றிவேறு முடிவறு விகார மியாவும்
விழுமிய பிரமா பின்ன விரிகன சின்ம யத்தி
னழுவிய விவர்த்தமாக நவின்றனர் பெரியோ ரன்றே

ஐதரேயம், பிருகதாரண்யம், சாந்தோக்கியம், முண்டக முதலிய உபநிடதங்கள் பிரஹ்ம சூத்திரம், சங்கரபாடியம், வாசிட்டம், ஈசுர, பிரம' பகவற்கீதாதிகள் தமிழ் கைவல்ய நவநீத முதலிய நூல்களும், சிவஞானபோதம், சிவஞான சித்தியார், மூவர் தேவாரம், திருவாசகம், பெரிய புராணம் முதலிய நூல்களும், திருவள்ளுவர் திருக்குறள், குமரகுருபர சுவாமிகளியற்றிய நீதி நெறி விளக்கம், மூதுரை, நன்னெறி முதலிய நூல்களும் முறையே வேதாந்த நூல்களிலும் சித்தாந்த நூல்களிலும் நீதி நூல்களிலும் ஒப்புயர்வற்றவை என்பது எனதபிப்பிராயம்.

சிவாகமங்கள் சிவபரம் பொருளே பிரஹ்மமெனக் கூறும். இவை காமிகம் முதலிய இருபத்தெட்டு. இவ்விருபத்தெட்டுள் ஒன்றாகிய இரௌரவ ஆகமத்துள் சிவஞான போதம் என ஒரு படலம் இருக்கிறது. அது பன்னிரண்டு சூத்திரங்களைக் கொண்டது. இதுவே வடமொழிச் சிவஞான போதம், இதனை அனந்த தேவர் ஸ்ரீகண்ட பரமேசுரருக்கும், அவர் நந்தியம்பெருமானுக்கும் அவர் சனற் குமார முனிவருக்கும், அவர் சத்திய ஞானதரிசினி முனிவருக்கும், அவர் மெய்கண்ட தேவருக்கும் போதித்தனர். இதனை மெய்கண்ட தேவர் தமிழில் மொழி பெயர்த்தருளினர். இதுவே தமிழ்ச் சிவஞான போதம். இத்தமிழ்ச் சிவஞான போதத்திற்குப் பலர் அநேக உரைகள் செய்திருக்கின்றனர். அவ்வுரைகள் கடின நடையும், பெரிய அளவும், உடையனவாதலின் தமிழ் மக்கள் கற்பதற்குக் கையில் எடுக்காதவாறு அச்சுறுத்துகின்றன. அவ்வச்சத்தை

நிவர்த்திக்கும் பொருட்டு எளிய நடையிலும், சிறிய அளவிலும் வேதாந்தப் பிரகாசம் என்னும் ஓர் உரை எழுதி வெளிப்படுத்த முன் வந்தனன். இவ்வுரையில் ஏனைய உரைகளிற் காணப்படும் பல மதக் கோட்பாடுகளும், அவற்றின் கண்டனங்களும் காணப்படா. அவை காணப்படாமைக்குக் காரணம்? மக்கள் பல்வேறு பெயர்களோடும், வடிவுகளோடும் காணப்படினும் அவர்களெல்லாம் மக்கட் சாதியினரேயாவது போல சமயங்கள் பலவேறு பெயர்களோடும் கொள்கைகளோடும், காணப்படினும் அவைகளெல்லாம் ஒப்புயர்வற்ற அத்வைத பரமான்மாவையே பேசுகின்றனவன்றி வேறல்ல. பெயர் வேற்றுமையால் மத வேற்றுமையைக் காண்பவர்களும் பேசுபவர்களும் 'யான்' 'எனது' என்னும் மதவெறி பிடித்தமாக்களேயாவர். இவ்வுரையில் ஒவ்வொரு சூத்திரத்தின் சாரத்தையும் அதனதன் அவதாரிகையாகவும் சூத்திரத்தின் பொருளை அதன் கீழே பதப் பொருளாகவும் இலக்கணக் குறிப்பு முதலியவைகளை விசேடவுரையாகவும் எழுதப்பட்டுள்ளன.

(சர்வ கற்பனுவதிஷ்டான பிரத்யக்க பின்ன பிரஹ்மத்தை) அறிவாகிய சிவத்தைப் பற்றிப் பேசும் இவ்வருமையான நூலைத் தமிழ் மக்கள் யாவரும் கற்று (ஞானாசிரியரை யடைந்து சிரவணித்து அவர் கிருபையால்) சிவ (பிரமான்ம வைக்கிய) ஞானமுற்று துக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷம் அடைவார்களாக.

குருபரன் துணை.

இங்ஙனம்,
**உரையாசிரியன்.**




திருப்பூவணம் வேதாந்த மடம்

## ஸ்ரீ காசி காநந்த ஞாநாச் சார்ய ஸ்வாமிகள் இயற்றிய

# சாற்றுக்கவி

1 பிரமவா நந்த வாரிதி படியப் பேசுநன் மார்க்க நூல் பலவாம்
திரம்பெறும் அதனுள் சிவாகமத் துள்ள சிவஞாந போதமும் ஒன்றும்
வரமிகு நூலுட் சூத்திரம் நாலில் வழுத்தினர் இறைவன தாற்றல்
தரமிகும் ஒன்று இரண்டைந்தோ டாறு சத்பாவ நியா மக மாகும்

2 உரங்கொளும் பிரத்தி யக்ஷமின் மையினே டுரியசத் சித்தாரூபமதாம்
பிறங்கிடு சீவனியல் பதுமூன்றில் பேசினர் மூன்று நால் எழாம்
அறந்தரு சீவசத் பாவமைந் தவத்தை அவனது சொரூபம தென்று
இரும்பெரும் பல்லை இரண்டினில் இசைத்தார் ஈரைந்து ஒன்றுபத்தாகும்

3 திடமிகு ஞாநி பிரமமா குதலும், திகழ்பிர பஞ்சம்பற் றுமை
உடலறும் உண்மைச் சாதநம் மூன்றில் ஒன்பது பன்னிரண் டெட்டாம்
அடர்கெடும் மோக்ஷ உபாயமும் தடையை அகற்றலும் பிரமஞா நத்தின்
படர்மிகு சாத நம்மெனும் பெயரால் பன்னிரண்டு சூத்திரத் திசைத்தார்

4 இவ்விதம் நாலு வகையதா நூலில் இறைஉயர்
பலமுஞ்சா தநமும்
எவ்வமில் உத்தி பலவுமே கொண்டு இயம்பினர்
மாணவர் மகிழத்
தவ்வமில் அதற்குத் தக்கவேதாந்தத் தகுதியர்
உரைகண்டார் அறுவர்
பவ்வமில் அதிலும் பண்புடை யுரையாப் பகர்ந்தனர்
பாரினில் விளங்க

5 அதனது நாமம் ஆநந்த விளக்கம் அமையவே
வைத்தனன் அவன்பேர்
புகழுறு நல்ல சிற்மயா நந்தப் பொருவறும் அத்வைதத்
துறவோன்
திதம்பெறு பிரம வாநந்த மடத்தின் திவ்விய அதிபனும்
மேலோன்
இதம்பெறு சீடர் கட்குநூல் பலவும் இன்பமாப்
போதிக்குங் குணத்தன்

6 இவ்விதம் செய்த உரையுடன் நூலும் என்றுமே
யிலகியின் பாகி
அவ்விதம் அதனைக் கற்பவர் கேட்போர் ஆநந்த
சொரூபத்தை அண்மிச்
செவ்விதா மனத்தைச் சீர்பெறச் செய்து செல்லுவர்
விதேககை வல்யம்
பவ்வமாம் பவத்தைப் பற்றிடா திருப்பர் பண்டுள
பெரியர்போ லின்றே

1—2—5—6 ஈசுவரன்
3—4—7 ஜீவன்
10—11 பலன்
8—9—12 சாதநம்

ஆக 4 வகை

உ

கோவில்பட்டி மடாதிபதி

ஸ்ரீ கோ. மு. விமலானந்த ஸ்வாமிகள் இயற்றிய

# கட்டளைக் கலித்துறை.

சீர்கொண்ட நல்லோர் சிவஞான போதத்தைச்
செந்தமிழால்
பேர்கொண்ட மெய்கண்டார் செப்புமோர்
நூலிற்குப் பேதமற
ஏர்கொண்ட மூவருமேத்து மீனும்பிகை என்பவள் வாழ்
ஊர்கொண்ட சின்மயா னந்தன்செய் வோருரை
யுத்தமமே

## வெண்பா

மெய்கண்டார் முன்னம் விளம்பியஅந் நூலதற்குச்
செய்யபிர காசவுரை செப்பினன்—துய்யபர
சின்மயா னந்த திருவள்ளல் யாவருக்கு
மன்னைபோன் றுள்ளா னவன்

சிவஞான போதமதைச் செந்தமிழாய் மாற்றி
தவவடிவாம் மெய்கண்டார் சாற்று—மவமிலா
அந்நூலதற்கு அரும்பிர காசவுரை
சின்மயானந் தன்செய்தான் றேர்ந்து

வேதாந்தஞ் சார்ந்து விளங்குபிர காசவுரை
ஆதார மென்று அறிந்தெவரும்—பேதாபே
தந்தன்னைப் போக்கிச் சமரச மாய்நின்று
சிந்திக்க ஏதுவெனறே தேர்

---

## நிலை மண்டில ஆசிரியப்பா

மலர்தலை யுலகில் மல்கிருள் அகல
இலகொளி பரப்பிடும் இரவியின் ஓங்கி
அகவிருள் அகல அறிவொளி யருளும்
தகவுடைச் சைவ சமய குரவர்தம்
கருத்தினை எவரும் கடிதின் உணர்ந்திட
அருமைசால் வடமொழி நூல்பல ஆய்ந்து
மெய்யுணர் வுற்ற மெய்கண் டாரெனும்
ஞானா சிரியன் நயமுடன் அருளிய
நூற்பா வதனின் நுண்பொருள் விளங்கிட
வேதாந்தப் பிரகாச உரையெனுந் தகைசால்
தெளிபொருள் விளக்கச் சீருரை செய்தனன்;
மதுரையம் பதியினில் மன்னிய மாண்புடைப்
பிரஹ்மா னந்த ஞானிதன் பெயரால்
விளங்கிடும் மடத்தில் வீறுடன் ஏழாம்
பட்டந் தன்னிற் பண்புட னமர்ந்தே
சார்ந்தோர் தமக்குத் தத்துவ நூல்பல
ஐயந்திரிபற அன்புடன் விளக்குவோன்
விறன்மிகு வீர சோம சுந்தர
தேசிகன் தன்பால் செம்மைசால் ஞானம்
சீருடன் பெற்ற சின்மயா னந்த
அடிகள் என்னும் அருந்தவத் தோனே

## நேரிசை வெண்பா

பார்புகழ் சைவ சமயப்பே ருண்மைதனைச்
சீர்பெறு மெய்கண்டார் செப்பினர்—ஓர்ந்ததனைத்
தன்னுணர் வால்விளக்கிச் சால்பா யுரைசெய்தான்
சின்மயா னந்தன் சிறந்து.

சே. முத்துக்குமாரசாமி,
தமிழ்வித்வான்,
சௌராஷ்டிர உயர்நிலைப்பள்ளி,
மதுரை.

௳

சிவமயம்

சித்தி விநாயகர் துணை.

# சாற்றுக்கவி

இராமநாதபுரம் ஜில்லா சிவகெங்கைத் தாலூகா வேம்பத்தூர் சங்கவித்வான் கவிராஜ பண்டிதர் பரம்பரை சௌந்தர பாரதியவர்கள் புத்திரர்.

## அம்பிகாபதி பாரதியவர்கள் இயற்றியது.

## நிலை மண்டல ஆசிரியப்பா

வெள்ளியங் கிரியில் விளங்கி டுந் தேவனு
வள்ளலாஞ்சி வபிரான் வையகமுய்ந்திட
வனப்பு மிகுத்த வடமொழியா லே
கனம்பா வுரைத்த கனி பா னிகர்த்த
நற்சிவ ஞான போத மாம் நன்னூல்
கற்றுச் சீடன் களிப்பெலா மேவிட
அவனி போற்றும் அனந்த தேவர்க்கு
உவகையாய்ச் சொல்லி யுற்றிடும் நூலை
அன்னவ ரன்பா யருங்கலை தேர்ந்த
திருவார் கண்ட பர மேசுரர்க்கு
அருமையாய்ச் சொல்ல அவர்தான் நந்தி
எம்பெரு மாற் கெழிலாய்ச் செப்ப
அம்புவி போற்ற அவர்தாம் மேலாய்
சனற் குமாரர்க்குத் தர மிகச் செப்ப
அன்னோர் சீடனுஞ் சத்திய ஞான
தெரிசினி முனிவர் தெளிவுறச் செப்ப
உரிமையா யன்னவ ருலகம் போற்ற
மேதினி சொல் மெய் கண்ட தேவருக்குக்
காதலாய்ச் செப்பிடுங் கண்ணிய நூலை
நாட்டவ ருய்ய நறுந் தமிழ் தன்னால்
பாட்டால் செய்தனர் பலரும் படிக்க
இந்த நூற் பெருமை எளியருரைப்பரோ
சந்த மாப்பலர் தாஞ் சவித்தா ரகமாய்

விந்தை யாய்க், கற்றிட, விளம்பின, ருளாதா
னந்த மிகுந்த விந்நூ லனைவரும்
சுந்தர மாகச் சுகமாய்க் கற்று
யுய்ந்திட வெண்ணி யுவகை யுடனே
செந்தமிழ்ச் சங்கமார் திருவார் கூடலில்
கொந்தார் சோலை குளிர்ச்சியாய் மேவும்
கீர்த்தி மிகுந்த கிருதமா நதியின்
ஆர்த்தியார் தெற்குக்க ணியார் மேடைசூழ்
(பிரியம்) பெற்பு மிகுந்த பிரஹ்மா னந்த
(அறிவு) திற்ப மோங்குஞ் சிகா மணி யான
சற்குரு மேவுந் தனமிகு மடமார்
கற்பகம் போன்ற கவினெலா மோங்கு
ஞா நவாசிட்டம் நலமா தேர்வோன்
தானங் கொடுக்குந் தன்மை வாய்ந்தோன்
வானவர் போற்றும் வண்டமிழ்ச சொக்கர்
கானமார் கயற்கணி கழலைத் துதிப்போன்
வந்தவர்க் கன்னம் வழங்கிடு மனத்த
னெந்தத் திசையு மெழிலாய்ப் போற்ற
பிரஹ்ம கிட்டன் பிரியமார் மனத்த
னருமையாய் வணங்கு மடியவர்க் கெல்லாம்
ஞாநமாஞ் செல்வ நல்கிடு நலத்தான்
மாந மிகுந்த சின்ம யானந்த
நற்குண னுலக நன்மை யாய்ப் போற்ற
சிற்கனம் வாய்ந்த தேவா மிர்தமாஞ்
விற்பன ரெல்லாம் விருப்பமாய்ப் போற்றிட
பொற்பு மிகுந்தவே தாந்தப் பொருளார்
பிரகாச மெனும் பெரிய வுரையினை
நரமார் நெல்லிக் கனிதா னெனவே
உள்ளம் மகிழ்ந்து உரைத்த விவர் தாம்
வள்ளலைப் போல வாழிய மாதோ

———




உ
சிவமயம்.

# சிவஞான போதம்.

இந்நூலாசிரியர், இங்கே ஆன்றோரொழுக்கத்தாற் பெற்ற இஷ்ட தெய்வ நமஸ்கார ரூபமங்கலத்தை அங்கீகரிக்கின்றார்.

## காப்பு

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

(பதப்பொருள்)

கல் ஆல் நிழல் — கல் ஆலமரத்தின் நிழலின் கண்ணே (வீற்றிருக்கும்)
மலைவு இல்லார் — உவமை இல்லாதவர்
அருளிய — அருளுதற் பொருட்டு
பொல்லார் — பொல்லாத பிள்ளையாருடைய
இணைமலர் — இரண்டு தாமரை மலர்போன்ற (பாதங்களை)
நல்லார் — சாதுக்கள் (தம்தலையில்)
புனைவர் — சூடுவர்

(விசேடம்) அருளிய என்பது 'செய்யிய' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். பொல்லாத பிள்ளையா ரென்னும் பெயரை யுடைய கணபதிப் பெருமானைப் "பொல்லார்" என்றார். மலைவில்லார் என்பதற்கு மலையை வில்லாகவுடையவரெனவும், மயக்கம் இல்லாதவரெனவும், அருளிய என்பதற்குப் பெற்றருளிய (ஈன்றருளிய) எனவும் உரைப்பினும் அமையும்.

தாம் தொடங்கிய நூல் இனிது முடிதற் பொருட்டுக் கடவுள் வாழ்த்துக் கூறினார்.

நூல் செய்யப் புகுவோர் ஆதிக்கண்ணே மங்கலம் (காப்பு) செயற்பாலது அவசியமே? என்னை நூல் முடிவுக்குத் தடைகளான எவ்வித விக்கினங்களும் அம்மங்கலத்தால் நாசமுறுதலின். விக்கினமென்பது பாவம். பாவத்தினால் சுபகாரியங்கள் முடிவாகா. ஆகலின் அப்பாவங்களைப் போக்க வல்ல மங்கலம் (காப்பு) வேண்டும். பாவமின்மையராயினாரோவெனின்? அவராலும் மங்கலம் செய்யத் தக்கதேயாம். இன்றேல் அந்நூலை நோக்குவோர்க்கெல்லாம் நூலாசிரியரிடத்து நாஸ்திகப் பிராந்தியுண்டாகி அந்நூற்கண் ஊக்கஞ் செல்லாதென்க. அப்படிச் செய்யும் மங்கலம் வஸ்து நிர்த்தேசரூப மங்கலம் நமஸ்காரரூப மங்கலம், ஆசீர்வாதரூப மங்கலம் என மூவகைத்தாம். சகுணம் அல்லது நிர்க்குணமாகவுள்ள பரமாத்மாவே வஸ்துவாம். அவ்வஸ்துவின் கீர்த்தனமே வஸ்து நிர்தேச ரூப மங்கலமெனப்படும். அப்படிக்கன்றி அவ்வஸ்துவிற்குவணக்கங் கூறுவது நமஸ்கார ரூப மங்கலமாம். தனது அல்லது மாணாக்கரது வாஞ்சித வஸ்துவைப் பிரார்த்திப்பது ஆசீர்வாத ரூப மங்கலம் ஆம்.



உ
சிவமயம்.

# சிவஞான போதம்.

## முதல் சூத்திரம்
[ஈசுவர சத்பாவம்]

அவதாரிகை (உலக காரணன் இறைவனே) நித்த புத்த முத்த சத்திய பரமானந்த அத்வைத வடிவ பரசிவத்தில், விவர்த்த ரூபத்தால் சக சீவ பரங்களாய்த் தோன்றல், நிற்றல், அழிதல் என்னும் மூன்று வினையுடைமையோடு கர்த்தாவாக விருத்தலால் (ஆரோபம் அதிஷ்டானத்துக் கன்னியமின்றி அதிஷ்டான வடிவமே யாதலின்) அதிஷ்டாந பிரத்யக்க பின்ன இறைவனே உளன் என இச்சூத்திரங் கூறுகிறது.

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்

(பதப்பொருள்)

அவன் அவள் அது என்னும் அவை — (அகண்டைக ரச பரிபூரண சச்சிதானந்த வடிவ பரசிவத்தில் விவர்த்த ரூபத்தால்) அவன் அவள் என்று சுட்டப்பட்ட உயர்திணையும் அது வென்று சுட்டப்பட்ட அஃறிணையு மாகிய காரிய உலகத் தோற்றமியாவும்.

மூவினைமையின் தோற்றிய திதியே — (பொய்யாயிருந்தும் மெய்போல தோன்றல், நிற்றல் அழிதல் என்னும்) மூன்று வினையுடைமையோடு தோன்றிய நிலை பேறுடைய பொருள்களே.

ஒடுங்கி மலத்து உளதாம் — (அவற்றில் ஒவ்வொன்றும் பின்னர்) மறைந்து அதாவது லயித்து (ஆணவ மலம், மாயா மலம், கன்ம மலம் என்னும்) மலங்களால் (மறுபடியும்) உளதாகும்.

அந்தம் ஆதி என்மனோர் புலவர் — (சத்து அம்சத்தால் உபாதான காரணனும், சித்து அம்சத்தால் நிமித்த காரணனுமுள்ள மாயா சபள இறைவனிடத்தே அல்லவே) தோன்றுதலும்; நிற்றலும், ஒடுங்குதலும் என்று அறிவு நூலுணர்ந்த சித்தர்கள் கூறுவர்.

(விசேடவுரை)

அவன் அவள் அது என்னும் சுட்டுப் பொருள்களன்றி உலகம் என ஒன்று இல்லையாகலான் "அவனவளது வெனும் வை" என்றார். என்னும் என்பது னகர வொற்று இடைக்குறை விகாரம் பெற்றது. அம் முப்பொருட்கும் உடைமை அம்மூவினைகளேயன்றி வேறில்லை யென்பதை உணர்த்த வேண்டி "மூவினைமையின்" என்றார். இன் என்பது ஒடு என்னும் பொருள் தந்து நின்றது. திதி = நிலை பேறு. திதியை யுடைய பொருள்களைத் திதி என்றார். 'திதி' சாதியொருமை. நிலைபேறுடைய = பொறிக்காட்சியில் நிலைத்து நிற்கின்ற. 'ஏகாரம்' தேற்றத்தின்கண் வந்தது. ஆணவம் = யான் எனதென்று நினைத்தல் மலம் — அழுக்கு, யான் எனதென்று நினைத்தல் ஒரு தொழிலாதலால், அது கன்ம மலமாயிற்று. கன்மம் = கருமம் (தொழில்). யான் என்று நினைத்தற்குக் காரணம் சொல்ல முடியாத தொன்றாதலால் (அநிர்வசனீயமாதலால்) அது மாயாமலம் என்று சொல்லப் பட்டது. யான் என்று நினைத்தது யார் எனில், மாயா சபள அறிவு சொரூபமாகிய இறைவனே. மலம் என்பது மூன்றும் வேற்றுமைத் தொகை 'அத்து'ச்சாரியை, வறுமையால் இரந்தனன் எனப் பொருள் தருதல்போல "மலத்தால் உளதாம்" என்பது மலத்தைப் போக்குவதற்காக உளதாம் எனப்பொருள் தந்து நின்றது. அம் முப்பொருள்களில் ஒவ்வொன்றும் ஒடுங்கி உளதாம் என்று ஒருமையிற் கூறினார். அந்த முறுதல் என்பதற்குத் "தன்னினங்கோடல்" என்னும் உத்தியால் தோன்றலும், நிற்றலும் என்பனவற்றைச் சேர்த்துப் பொருள் உரைக்கப்பட்டது. இங்ஙனம் காரியவுலகம் காணப்படுவதால் உலகப் படைப்பாதிகட்கு அறிவாகிய இறைவன் சத்தியாகிய மாயையோடு சேர்ந்து காரணனாகிய கர்த்தாவாக இருக்கிறான். என்பது பெற்றாம்.

## பிரம கீதை

காலமுங் கன்மந் தானும் பரிபாக மான வாறே
ஞால பண்டாக நல்ல குணத்தினைக் கலந்து நிற்கும்
பாலதொன் றில்லா விந்தச் சத்திமான் படைத்தற் காக
வேலவே யெல்லா மாவோ மென்றுகொண் டிசைந்து
[பார்த்தான்

## பகவற் கீதை

சாவாது பிறவாது தனிமுதலா யிருந்தநா
னாவிவ் வுலகுபடு மழிதுயர்தீர்ப் பதற்காக்
மேவாது நின்றேயென் மாயையினால் மெய்யேபோ
லோவாது பிறந்திடுவே னுகந்தோறு முகந்தோறும்

## சங்கர கீதை

நன்றாய் ஞான கனமாகி நானே யெல்லாம் பிறப்பிடமா
யொன்றாய் வேறோர்பொரு ளின்றி யொளியா யொன்றோ
[டுவமிப்ப
தன்றா யகில சராசரங்கட்காதா ரந்தா னாயென்றும்
பொன்றா தனுவா யவிகாரப் பொருளாய்ப் புலனாற் புணர்ப்
[பரிதாய்

---

இரண்டா வதிலா தளவுகளா லெட்டாத்தவா
யெங்கெங்குஞ்
சிரங்கால் கைகண்முக முடைத்தாய்த் தெரியப்படாதாய்த்
[திரமாகி
யிரும்பார் நீர்தீ கால்வான மெல்லா மிருத்தற் கிடமாகும்
பரந்தா னுணர்ந்தோர் நிர்க்குணமாம் பரம வியோம
[மென்பர்களால்

## வாசிட்டம்

யாது மென்று மெவ்விடத்து மிறத்தல் பிறத்த லிலதாகு
மோதும் விவர்த்த ரூபத்தா லுலகாய்ப் பிரம மேவளரு
மாதலா லிவ்வுல கெல்லா மடியு முடியு நடுவுமற்ப்
பேத மறப்பா வாபாவம் பிறவாப் பொருளென் றிடர்தீர்வாய்

## திருவாசகம்

*நிலநீர் நெருப்புயிர் நீள் விசும்பு நிலாப் பகலோன்*
*புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்*
*உலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே*
*பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ*

## தேவாரம் (சுந்தரமூர்த்தி சுவாமிகள்)

*ஊனாயுயி ரானாயுட லானாயுல கானாய்*
*வானாய்நில னானாய்கட லானாய்மலை யானாய்*

## தேவாரம் (திருநாவுக்கரசு சுவாமிகள்)

*ஊனாகி யுயிராகி யதனுணின்ற வுணர்வாகிப் பிறவனைத்து*
*[நீயாய் நின்றாய்*
*வடமொழியுந் தென்றமிழு மறைகணான்கு மானவன்காண்*

## திருமந்திரம்

*தானே படைத்திடுந் தானே காத்திடுந்*
*தானே துடைத்திடுந் தானே மறைத்திடுந்*
*தானே யிவைசெய்து தான்முத்தி தந்திடுந்*
*தானே வியாபித் தலைவனு மாமே*

---

## இரண்டாம் சூத்திரம்

*[ஈசுவர நியாமக சக்தி]*

### அவதாரிகை.

(நியாமக சக்தியுடையவன் இறைவனே) அறிவாகிய இறைவன் தனது சிற்சக்தியால் உயிர் (ஜீவர்) களை வினைக்கீடாக சுவர்க்க நரகாதிகளைப் பொருந்த போக்குவரவு புரிவிக்கும் என இச்சூத்திரங் கூறுகிறது.

அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே

(பதப்பொருள்)

| | |
|---|---|
| தானே | — (சத்தியக் ஞானனந்த பிரத்தியக்க பின்ன இறைவனும்) தானே |
| அவையேயாய் | — (விவர்த்தரூப ஆவரணத்தால் சராசரதிரியக்காதி) அவ்வெல்லாப் பொருள்களேயாய் |
| இருவினையின் | — (தோன்றி அவைகளில் பகுத்தறிவுடைய மனுடர்கள் செய்யும்) நல்வினை தீவினை என்னும் இரண்டு வினைகளுக்கீடாக |
| ஆணையின் | — (மாயாசபள இறைவன்) தனது சிற்சத்தியால் |
| போக்கு வரவு புரிய | — (உயிர்கள்) நால்வகையோனிகளில் இறத்தலையும் பிறத்தலையுஞ் செய்ய |
| நீக்கமின்றி நிற்கும் | — (அவ்வுயிர் களினுள்ளங்கடோறும் அந்தர்யாமியாய்) நீங்காமல் நிற்பன் |

(விசேடவுரை)

அன்று 'ஏ' என்பன அசைகள். பிரஹ்மசங்கற்பத்திற்றோன்றிய சகல கற்பிதங்களும் பிரஹ்மமுமாகா, பிரஹ்மத்துக்கன்னியமுமாகா ஆதலின், "தானே அவையேயாய் என்று" கொண்டு கூட்டிப் பொருள் உரைக்கப்பட்டது, "ஏகாரம்" இரண்டும் பிரிநிலை. பகுத்தறிவுடையமானிடர் தாமாகவே இருவினை புரிகின்றனரென்பதையும் அவற்றின் பயனாகிய இறத்தல் பிறத்தல்கள் இறைவன் சிற்சத்தியால் நிகழ்கின்றனவென்பதையும் உணர்த்தும் பொருட்டே "ஆணையின்" என்பதைப் "போக்குவரவுபுரிய" என்பதன் பின்வைத்தனர். உயிர்கள் வினைகளைச் செய்யுங்காலத்தும் பிறப்பிறப்புக்களை அடையுங்காலத்தும் மற்றெக் காலத்தும் உயிர்களோடு இறைவன் ஒன்றி அந்தர்யாமியாய் நிற்கின்றான் என்பதை உணர்த்தவே "நீக்கமின்றி நிற்கும்" என்றார். இவ்வுலகம் சிருஷ்டிக்கு முன் சத்தாகவே (அதிஷ்டானமாகவே) இருந்

தது ஆரோபிதத்திற்கு அதிஷ்டானத்தைக் காட்டிலும் முக் காலத்திலும் இருப்புக்கிடமில்லாதது ஆகையால் (த்வைதம்) இரண்டு என்பதினாலேயே பயமுண்டாகிறது

## கைவல்யம்

இப்படிப் போல நாம ரூபங்க ளிரண்டு மின்றி
யொப்பமா யிரண்டற் றொன்று யுணர்வொளி நிறைவாய்நிற்கு
மப்பிரமத் திற்றோன்று மைம்பூத விகார மெல்லாஞ்
செப்பு கற்பனை யினாலே செனித்தவென் றறிந்து கொள்ளே

## பிரம கீதை

பிரமனிவனே யிந்திரனும் பிரசாபதியு மிவனி வனே
யுரமதுடையவும் பர்கள்பூ தங்களுலகங்களு மெல்லா
முறை செய்திடு மண்டச முதலா மியோனி பேதங் களு
மிவனே
குரகதங்கோ மானுடருங் குஞ்ச ராதி களு மிவனே

வினை மற்று மியம்பாத வியங்க திற்கப் படுவ வெலா
ஞான கனமா மிறையவனே நலமாஞ் சிவனு மானுமுத
லான நாமங் களையுடைய யாவு மறியு மெய்ப் பரம
னின மில்லா வறிவுருவே யெல்லாப் பொருட்கு மிறைபேறும்

## பகவற் கீதை

மண்ணி னுய விகாரமும மண்ணேயந் மண்ணொழிந்துப்
பண்ணி னாரும் பிறரில்லை பண்ணப்பட்ட பல பொருள்க்
ளெண்ணி னுகு வதன்முன்பு மிறந்த பொழுது நிகழ்விடத்துங்
கண்ணி னுடி மண்ணொழியக் கண்டாருளரோ கட்டுரைப்பாய்

## சகா கீதை

உற்பவ சராசர வியோனி யொரு நாளும்
பற்பலவ தாகமொழி பாதல மினைத்து
மெப்புவ னமும் பிரமாண்டமவை யாவு
மிப்படியிருக்கு மது வென்ற னியமத்தால்

## வாசிட்டம்

பிறிவாம் பொருளின் மரத்திருந்த பேதப்படியே யுதாரத்திற்
செறிவாஞ் சிருட்டிசமத் காரஞ் சிதைவற்றுண்டாய்ச் செறி
வதுபோ
லறிவாஞ் சரீரியெனும் பொருளின்கன்ற வுதாரத் தங்குரமாய்
நெறியார் சகத்தின் வடிவமெலா நீங்கா வியல்பாய் நிறைந்
திருக்கும்

சொன்ன வுலகங்களுக்குருவந் தோன்று நின்ற மாத்திரமாம்
பின்ன மின்றி யாவையு மாய்ப் போரவறிவாய்ப் பெரு
விண்ணாய்

மன்னு பிரம மொன்றென்றே வருந்தி முயன்று பாவிப்பா
யன்ன நிலேயே கைவந்தா லலைவற் றுள்ள மறிவுருவாம்

சங்கற்ப மெனும் புரண சத்தியினைத் தற்பரந் தானே
தன்னுற்
பொங்குற்ற வாயுவலைவைச் செய்யு மாறுபோற் புரிந்த போது
சங்கற்ப விரியுருவா யயல் போலாய்ச் சகவடிவாய்த்
தனைத்தானுடிப்
பொங்குற்ற மனமாகுஞ் சங்கற்ப மயமா மிப்புவியைக் காண்க

## திருமந்திரம்

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பாரொடு பூதம்
பரத்தில் மறைந்தது பாரொடு பூதம்

---

## மூன்றும் சூத்திரம்

[ ஜீவசத் பாவம் ]

(அ-கை) உடல் பொறி மனாதிகட்கு வேறாய், நனவாதி அவஸ்தாத்திரயசாக்ஷியாய் கோர மூட புத்திக்கெட்டாததாய் சாதன சகித சூக்கும புத்திக் கெட்டுவதாய் சூக்ஷ்மமாய் ஆத்மா உளதுஎன இச்சூத்திரங் கூறுகிறது.

உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
லுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா

(பதப்பொருள்)

இலது என்றலின் — (அங்கமுயிரிந்திய நானன்றி வேறு எனைக் காணேனுகலான் ஆன்மா) இல்லை என்றலின்.

எனது உடல் என்றலின் — (நனவில்) சரீராதிகளை (நான் என்றும் தார புத்திரதனதிகளை) என்னுடையது என்றலின்.

ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் — (கனவில்) ஐம் பொறிகள் (தூலதேக) வொடுக்கத்தை (மனோமாத்திர விவகாரத்தை) அறிதலின்.

கண்படில் உண்டி வினையின்மையின் — உறக்கத்தில் (சுழுத்தியில் பிராண தர்ம) உணவும் (சுகதுக்கத்தைச் செய்யும் மன தர்ம) தொழிலும் இல்லாமையின்

உணர்த்த உணர்தலின் — (துரியத்தில் ஆசிரியர்) அறிவிக்க அறிதலின்.

மாயா இயந்திர தனுவினுள் — மாயா (காரியமாகிய) இயந்திர (மெனச் சொல்லத் தக்க) உடம்பாதிகளுள்.

ஆன்மா உளது — (வேறாக) ஆன்மா சூக்ஷுமமாக உள்ளது

(விசேடவுரை)

'இலது என்றல்" முதலிய ஐந்து செயல்களால் மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது என்று கொண்டு கூட்டிப் பொருள் உரைக்கப்பட்டது. உடலாதிகளைத் தவிர உயிராகிய ஆன்மாயாதுளது, இருந்தாற் காணப்படாது (படாமையின்) ஆத்மா இலது என்று மூட தசையிலிருத்தலின் 'இலது என்றலின்' என்றார். நனவில் உடலாதிகளை நான் நான் என்று அகந்தாபிமானமும் மனைவி மைந்தர் பொருளாதி

களிடத்தில் எனதென்று மமதாபிமானமுஞ் செய்து அக்கினி சந்திராதித்தியப் பிரகாச மொழிந்த போதும் சப்தாதிபுலன்களை அறிந்து நிற்றலின் 'எனது உடல் என்றலின்' என்றார். கனவில் ஆன்மா வென்றபிமதமான உடல் பொறிகள் சேட்டையற்றுக் கிடக்கவும் விடய கோசர அந்தக் கரண விருத்தி மாத்திரத்தை சாக்ஷி அறிதலின் 'ஐம்புலனொடுக்கம் அறிதலின்' என்றார். சுழுத்தியில் சுகசோசரமும் அவித்யா கோசரமுமான சாக்ஷாத் அஞ்ஞான மாத்திரத்தை அறிந்திருத்தலின் பிராண தர்ம பசி தாகமும் அந்தக் கரண தர்ம விருத்தியும் லீனமாமாதலின் 'கண்படில் உண்டி வினையின்மையின்' என்றார். ஆசிரியர் தடஸ்த லட்சணங்கொண்டு சரீரத்திரய விலக்ஷணன், அவஸ்தாத்திரயசாக்ஷி என்பதவனுக்குத் தானே அநுபவமாகும்படிக்கு உணர்த்தலின் 'உணர்த்த உணர்தலின்' என்றார். கூறிய முறையால் சரீராதிகளினும், அவஸ்தாதிகளினும் அன்னியமாயும், ஆந்தரமாயு மிருத்தலின் 'மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது' என்றார். சந்தேக விபரீதங்களினிவர்த்தி சுருதி யுக்தி அநுபவம் என்னும் மூன்றனுள் அனுபவத்தின் கண்ணதேயாகலின் தேகாதிகளுக்குத், "தான்" வேறு என்பது அவனுக்குத் தானே அநுபவமாகும்படி உணர்த்தினனென்க. உடம்பு பல் தொழில்களைச் செய்யும் பல உறுப்புக்களைக் கொண்டிருத்தலால் அதனை 'இயந்திரம்' என்றார். உடம்பு பல உறுப்புக்களையுடைய இயந்திரம் போன்றதாயினும், அது பல் உறுப்புக்கள் இல்லாத ஒரு சாமான்ய கருவிபோல உபயோகப்படத் தக்கதாயும் இருத்தலின் அதனைத் தனுவென்றுங்கூறினர். தனுவினுள் என்பதில் "இன்" சாரியை.

## கைவல்யம்

தேகமல் லாமல் வேறே தேகியார் தானே னென்றாய்
மோகமாங் கனவில் வந்து மூளைத்தவ னெவனீ சொல்வாய்
சோகமாங் கனவு தோன்றாச் சுழுத்திகண் டவனார் [சொல்வாய்
ஆகநீ னனவி லெண்ணு மறிவுதா னேது சொல்வாய்

நனவுகண் டதுநான் கண்ட நனவுள நினைவு நீங்கிக்
கனவுகண் டதுஞ்சு ழுத்தி கண்டதும் வேறொன் றேபோல்
தினமநு பவிப்ப தொக்குந் தெரியவு மில்லை சற்றே
மனதினி லுதிக்கும் பின்னே மறைக்கு மதரு ளுவீரே

தூலசூக் குமவஞ் ஞானந் தோன்றுமூன் றவத்தை தாமுங்
காலமோர் மூன்றுஞ் சன்மக் கடலெழுங் கல்லோ லங்கள்
போலவே வந்து வந்து போனவெத் தனையென் பேனுன்
ஆலமர் கடவுளாணை யவைக்கெலாஞ் சாட்சி நீயே

## பிரம கீதை

இந்தப்புரங்க ளொருமூன்று மிவன்றனிடையே யிறப்பதுநிர்த்
தொந்தப்புருட னொருகாலு நசியானுதலாற் சொல்லு
மந்தப்பரமனே யவன்று ன்றியாமையினு லப்பானைப்
பந்தப்படு மோர்சீவனெனப் பார்ப்பார் பவத்தே
[பதைக்கின்றார்

## பகவற் கீதை

உருப்பான்மை மற்றதனுக் கொருநாளு மின்மையாற்
செருப்பால்வெம் படைக்கலங் கள்சேதிக்க மாட்டாவா
னெருப்பால்வெந் தழியாது நீரானைக் கொழுகாது
மருத்தாலுஞ் சலியாது மற்றதன் றன்வகை கேளாய்

## ஈசுர கீதை

அழியா தெங்கு முளதாகி யனைத்துட் புறம்புந் தானிரம்பி
யொழியா வறிவா யொருகுற்ற முரைத்தற் கரியதொரு
[பொருளே
கழியா மாயை யதனுலே காணப் பலவாய்த் தோன்றியிடு
மழிவா யினதென் றொன்றுமில்லா திருக்குமதுவே யியல்
[பென்றான்

## வாசிட்டம்

தெரித்தறியும் பொருளேனைக்காச் சிவவறி வதுவாகச்
[செப்பலாகும்
விரித்தபுல னநுபவித்து மநுபவியா மனமதுவாய்
[விளம்பலாகும்

புரித்தவுணர் வொளிநெஞ்ச மூலகிவற்றி னறிவதுவாப்
[புகலலாகும்
பருத்ததொழிற் செய்யினுங்கற் போலிருக்கு நிலையதுவாய்
[பகாலாகும்

ஆதிகாலத் தெழுந்தபவத் தனைய சிவருழல்கின்று
ரோதுமின்ப துன்பமயக் குள்த்துக்கொழிய வுனக்கில்லை
யீதுதெரியா விராகு மதிமேவித் தெரிதல் போலவரு
பூதியனவா முயிர்காணும் பொருளாற் காணப் படுமன்றே

## திருமந்திரம்

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானுர்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளித் தெளிந்தோர்க்குச் சீவன்சிவ லிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே

---

## நான்காம் சூத்திரம்

(ஜீவ பஞ்சாவஸ்தை)

### அவதாரிகை

சிதாபாசனுகிய உயிர் அந்தக்கரணத்தினும் வேறுயினும் மந்திரியும் அரசனும் போல சேர்ந்தவனுய் ஆணவாதி மலத்தினுல் தனது நிஜசோரூபத்தையறியாது, நனவாதி ஐந்தவஸ்தையை அடையும் என இச்சூத்திரங் கூறுகிறது.

அந்தக் கரண மவற்றி னென் றன் றவை
சந்தித்த தான்மா சகச மலத் துணரா
தமைச்சர சேய்ப்ப நின் றைந்தவத் தைத்தே

(பதப்பொருள்)

ஆன்மா அந்தக்கரணம் — (சிதாபாசனுகிய) உயிர் அந்தக்
அவற்றின் ஒன்று அன்று — கரணமாகிய மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அவற்றுள் ஒன்று அன்று

அவை சந்தித்தது — அவற்றோடு (தப்தாயபிண்டம் போல்) கூடியது

| | | |
|---|---|---|
| சகச மலத்து உணராது | — | சகஜமான (யான் எனதென்னும்) ஆணவமலத்தினால் (தன் நிஜரூப மான கூடஸ்தனை) அறியாது |
| அரசு அமைச்சு ஏய்ப்ப | — | அரசன் மந்திரியோடு கூடி நிற்றல் ஒப்ப |
| நின்று | — | (அவ்வந்தக்கரணாதிகளோடு கூடி) நின்று |
| ஐந்து அவத்தைத்து | — | (நனவு, கனவு, உறக்கம், துரியம் துரியாதீதம் என்னும்) ஐந்து அவத்தைகளையுடையது. |

(வி—ரை)

"ஏ"காரம் ஈற்றசை. அவை என்பது மூன்றும் வேற்றுமைத்தொகை. ஆன்மா என்னும் எழுவாய், அன்று, சந்தித்தது, உணராது, அவத்தைத்து என்னும் நான்கு பயனிலைகளைக் கொண்டு நின்றது. சகசம் (உடன் நிகழ்வு) இயற்கை. ஆணவமலம்—யான் என்னும் அகங்கார அழுக்கு. ஆத்மா அவ்வழுக்கு அற்றது. சிதாபாசனும் உயிர் அவ்வழுக்கு உள்ளது. அறிவு சொரூபமாகிய ஆத்மா "யான்" என்று அகங்கரித்ததால் (ஜீவாத்மா) உயிர் ஆயிற்று, அதனாலேயே ஜீவாத்மாவுக்கு ஆணவமலம் சகசம் என்னப்பட்டது. மனம்—நினைக்கும் சக்தி, புத்தி—அதுவா, இதுவா என்று ஐயமுற்ற விடத்து அவ்விரண்டில் ஒன்று என்று நிச்சயிக்கும் சக்தி. சித்தம்—சிந்தனை சக்தி, அகங்காரம் யான் என்று எழும் சக்தி. அவத்தை—நிலை, ஜாக்கிரம்—நனவு—ஐம்பொறிகளோடும் மனத்தோடும் சேர்ந்து ஜீவாத்மா தொழில் செய்யும் நிலை. சொப்பனம்—கனவு—ஐம்பொறிகளை விடுத்து ஜீவாத்மா மனத்தோடு மாத்திரம் தொழில் செய்யும் நிலை. கனவில்ஞேய, ஞானங்கள் மனத்தின் பரிணமமாம். சுழுத்தி—உறக்கம்—சுககோசரமும், அவித்யா கோசரமுமான சாக்ஷாத் அஞ்ஞானத்தின் தொழில் செய்யும் நிலை. துரியம்—நனவிற் சுழுத்தி. மன இந்திரியங்கள் தமது காரணமான அஞ்ஞானத்தில் சுழுத்தியிற்போல லீனமாகாமல் தத்தம் கோளகைகளிலிருத்தலானும், அங்ஙனமிருப்பினும் விஷயா நுபவரூபமான பகிர் முகவிருத்தி அவைகட்கின்மையானும் துரியம்நனவிற் சுழுத்தி நிலை. இதனை சவிகற்ப சமாதி

என்பர். துரியாதீதம், ஜீவாத்மா அறிவாகவே அஃதாவது தான்தானாகவே நிற்கும் நிலை, இதனை நிருவிகற்ப சமாதி என்பர்.

## வேதாந்த சூடாமணி

சத்துவ குணத்திற் றோன்றுந் தயங்கு மூட்கரண நான்கும்
புத்தி யிந்தியங்க ளைந்தும் போந்துதித் திடு மிராச
தத்தில் வாக்காதி யைந்துந் தரும் பிராணாதி யைந்து
மத்தமோ குணத்திற் றோன்று மகல் விசும்பாதி பூதம்
அப்பெரும்பூதம் பஞ்சீகரித் துலகாகி நிற்கும்

## கைவல்யம்

ஆதிமூக் குணமிப் பூத மடங்கலுந் தொடர்ந்து நிற்கும்
கோதில் வெண் குணத்தி லைந்து கூறுணர் கருவி யாகும்
ஓதிய பின்னை யைந்து முளம்புத்தி யிரண்டா ஞான
சாதன மாமிவ் வேழுஞ் சற்குணப் பிரிவி னாலே

இராசத குணத்தில் வேறிட் டெடுத்த கூறைந்து மைந்தும்
பிராணவா யுக்க ளென்றும் பெருந்தொழிற் கருவியென்றும்
பராவிய பெயரா மிந்தப் பதினேழு மிலிங்க தேகம்
சுராசுரர் நரர்வி லங்காய்த் தோன்றிய வுயிர்கட் கெல்லாம்

மூன்றமாம் பிரமத் துக்கும் புறத்துள விகாரங் கட்கும்
ஆன்றகூ டஸ்த னுக்கு மகத்துள விகாரங் கட்கும்
தோன்றிய பேதஞ் சற்றுந் தோன்றுமன் மறைத்து மூடும்
ஊன்றிய பவவி யாதி யுண்டாக்கு முபாதி யீதே

## பிரம கீதை

யாவனொருவன்றனை யிழந்தே யளவில் வேறுபடக் கண்டும்
யாவனொரு சொல்வேறுபடக் கேட்டு மறிந்தும் வருகின்றான்
யாவனொரு வன்றனக் கென்றுஞ் சிறுமை யதுவே பிறப்பிறப்புப்
போவதில்லாக் காரணமு மதுவே யென்று புகன்றனனால்

## பகவற் கீதை

பண்டு செய்பகு திப்படி யேவினை
கொண்டு நின்றிடிற் கோவித ரும்பிற
ருண்டு கொன்னல மென்றுணர் கிற்பரோ
கண்டு நின்றவென் கற்பனை யாலரோ

### ஈசுர கீதை

கோலமறிவே சீவனுக்கு கொண்டு துய்க்குங் கருவிமனஞ்
சானு மதனு லவிவேக மதனுற் றுன்பஞ் சாருமான்
மாலும் பகுதி யிற்புருடன் வைத்த பற்றுன் மற்றந்தக்
காலஞ் செய்யும் பிறப்பிறப்புக் கதுவே யென்றுகாரணமாம்

### வாசிட்டம்

செல்லுறு கான லாற்றிற் றேன்றிடுந் திரைகள்போல
வில்லையா மனத்தி லுண்டு போலெழு மிந்த ஞால
மல்லல்செய் மோகம் பந்தந் தம மல மவித்தை மாயை
புல்லுசம் சார மென்றே ஞானிகள் புகலப்பட்ட

தானேசங் கற்பித்துத் தன்மாத்திரத்தாற்றனிவலையா
முட்டொழில்கடன் னைக்கட்டக்
கானேறு சிங்கம்விலங் குற்றதென்னக் கவலையினுன் மிகவு
மனங் கரைந்துசோரு
மானுத மனம்புந்தி ஞானஞ் செய்கை யகங்காம்வா தனையுடலம்
பகுதி மாயை
யூனுன மலங்கருமம் பந்தஞ் சித்த மோதவித்தை யிச்சையென
வுரைப்பான்றே

### திருமந்திரம்

சாக்கிர சாக்கிர மாதி தனி லைந்து
மாக்கும லாவத்தை யைந்து நன வாதி
போக்கி யிவற்றெடும் பொய்யான வாறுறு
நீக்கி நெறி நின்றொன் றாகியே நிற்குமே

---

## ஐந்தாம் சூத்திரம்

[ஈசுவர அப்பிரத்தியக்ஷம்]

அவதாரிகை

உயிர் (சிதாபாச ஜீவன்) போறிகளோடு கூடிநின்று, அறிவாகிய இறைவன் (பிரத்தியக்க பின்ன பிரஹ்ம) ஆசிரிதமாயை யாகிய சிற் சத்தியை பிரத்தியக்ஷமாய் அறியாது என இச் சூத்திரங் கூறுகிறது.

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போல
தாந்த முணர்வின் தமி யருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே

(பதப்பொருள்)

| | | |
|---|---|---|
| விளம்பிய உள்ளத்து | — | (மேற்) கூறிய உயிருடன் (சிதாபாச னுடன் கூடிநின்ற) |
| மெய், வாய், கண் மூக்கு (செவி) | — | மெய் (துவக்கு) வாய் (ஜிஹ்வை) கண் (சக்ஷுஸ்) மூக்கு (கிராணம்) செவி (சுரோத்திரம்) என்னும் ஐம்பொறிகளும் |
| அளந்து அறிந்தும் அறியா | — | (தத்தம் புலன்களை) அளவிட்டறிந்தும் உயிரை (விசேஷணம்சத்தோடுகூடிய சிதாபாச ஜீவனை) அறியமாட்டா. |
| அவை போல | — | அப்பொறிகள் அறியாததுபோல |
| தாம், தம் உணர்வின் | — | உயிர்கள் (சிதாபாச ஜீவர்கள்) தமது அறிவினால் (பொறியாதிகளால்) |
| தமி அருள் (அறியா) | — | இறைவனது (அறிவாகிய சிவத்தினது) சிற்சத்தியை (அனுமானத்தாலன்றி பிரத்தியக்ஷமாக) அறிய மாட்டா. |
| காந்தங்கண்ட பசாசத்து | — | காந்த சந்நிதானத்தில் இரும்பு (சேட்டிக்குந் தன்மைபோல) |
| அவை | — | அவ்வுயிர்கள் இறைவன் சந்நிதான மாத்திரத்தால் பொறிகளோடு கூடி உள் வெளி புலனாதிகளை (பாகியாந்தரப் பிரபஞ்சங்களை) அறியுந்தன்மையை உடையன |

(வி—ரை)

உள்ளத்து என்பதன் கண் 'அத்து'ச்சாரியை, உள்ளம்—உயிர் (சிதாபாச ஜீவன்) மூன்றாம் சூத்திரத்தில் கூறப்பட்டது அஃதே. செவி என்பது சொல்லெச்சம். பொறிகள் அறிதல்

தத்தம் புலன்களையேயாதலால் புலன்களை என்று விதந்து கூறிற்றிலர். உம்மை விகாரத்தால் தொக்கது. ஆங்கு என்பது அசை. தமி — ஒப்பின்மை, அஃது ஈண்டு ஆகு பெயராய் ஒப்பில்லாத இறைவனுக்கு ஆயிற்று. அறியா என்பது சொல்லெச்சம். ஏகாரம் ஈற்றசை. பின்னம், அபின்னம், பின்னா பின்னம், சத்து, அசத்து, சதசத்து, சாவயவம், நிரவயவம், சாவயவ நிரவயவம் என்னுமிவற்றுள் இத்தன்மைத்தான சொரூபமுடையதென நிச்சயித்துச் சொல்லக்கூடாமையின் அநிர்வசனீய அநாதி பாவரூப முடையது மாயையாகிய சிற்சத்தி. அந்த சிற்சத்தி அநுமானத்தாலறியற் பாலது வல்லது பிரத்தியக்ஷமாக அறிய முடியாதென்பார் ' தாந்தமுணர்வின் தமியருள் அறியா ' என்றார்.

## கைவல்யம்

அருவ மாகுமா யாவித்தைகள்விளை யாடுமுன் றெரியாவே
உருவ மாம்பல் கந்தர்ப்ப சேனையாயுதித்த பின் வெளியாகும்
பிரம சத்திக ளநந்தமா மதைக்கண்டு பிடித்திடல் கூடாதே
பரவு பூதங்கள் கண்டறு மானத்தாற் பலருக்கும் வெளியாமே

காரி யங்களுஞ் சத்தியாதாரமுங் காணுமற் றதுமாயம்
பாரி னின்றமா யாவியுஞ் சேனையும் பார்ப்பவர் கண்காணும்
வீரியந் திகழ் வித்தையா யினசத்தி வெளிப்படா ததுபோல
பேரியற் பிர மத்துக்கு மூலருக்கும் பிறிது சக்திகளுண்டே

## பிரம:கீதை

செய்வான் செய்விப்பவன் செய்யும் பொருள்செய்கருவி [செய்தொழிலென்
றைவாய்ப் பொருளும் வெறு மான்மாவாகித் தோன்று [மிறையருளா
லெய்யா ஞான மறிபொருளு மறிவோ னென்னப்படும் பேத
மெய்யா மிறைவன் திருவருளா லெல்லாந் தானாய் [விளங்குமால்

## பகவற்கீதை

காணுங் கேட்குமுறு மோக்குங்காலா னடக்குங் கண்வளரும்
பேணுந் துறக்கு மூச்சுவிடும் பேசும்விழிக்குஞ் சிம்பிளிக்கும்

பூனு மின்னும் பலவெனினும் புலன்சேர் பொறியின்
[புணர்ப்பென்றே
னுனுங் கிரியுமென வொன்றுந் துளக்கான் விளங்குந்
[துணிவுடையோன்

## ஈசுர கீதை

பூத மைந்திஞெடு மனமும் புத்திமமதை பூதாதி
யாதிப் பகுதியென்னியமத் தாலேயென் பாலாயிருக்கு
மோதிவந்த வனைத்திற்கு மியோனி யாகியுள மாயை
பேதஞ் செய்வதென்னேவ லாலேயன்றிப் பிறிதில்லை

## வாசிட்டம்

ஆற்றுமதத் துவஞ்சகல சத்திமா ஞமவற்றி னடனத் தாலே
தோற்றுகின்ற பந்தம்வீ டெல்லாஞ்செய்
[திடுஞ்சம மாய்த்தூய சித்தாய்
வேற்றுருவெல் லாமியற்று மிதனுக்கிச் சாசத்தை வியோம
[சத்தை
சாற்றுகின்ற காலத்தின் சத்தைநிய திசத்தை தடமா சத்தை
திடஞான சத்திதொழிற் சத்திதொழிற் செய்கிற்போன்
செய்யாதோனு
மிடமான சத்திவை முதற்பரம சத்திகளுக் கெல்லை யில்லை
மடமான மினிர்சத்தி சனனமா ணங்கடரும் வைய மெங்குந்
தடமான மீட்சியெனுஞ் சத்தியாற் பிறப்பிறப்புத் தவிரு
[மன்றே

## திருமந்திரம்

மெய்வாய் கண்மூக்குச் செவியென்னு மெய்த்தோற்றத்
தவ்வாய வந்தக் கரண மகிலமு
மெவ்வா யுயிரு மிறையாட்ட வாடலாற்
க்வ்வாயி லாகிறை யெங்குமெய் கண்டதே

## சிதாசாரம்

இருக்கினு மசேதனத்துக் கிச்செயலுண் டோவெனவே
யுக்ருகுபடாக் காந்தமுன்னி லூசிகிக ளென்றவரோ

## ஆறும் சூத்திரம்

[ஈச்வரன் சத் சித் சொரூபம்]

### அவதாரிகை

அறிவாகிய இறைவன் (பிரத்யக்க பின்ன பிரஹ்ம) சொரூபம் காணக் கூடாதானுல் முயற்கோம்பு போல இல்லாததா (அசத்தா) கும். காணப்படுமேனின் உலகப்பொருள்போல சடமாகும், அவ்வ சத்து சடங்களுக்கு வேருய் சத்தும் சித்தும்(ஆனந்தமும், நித்திய மும், பூரணமும்) ஆம் என இச் சூத்திரங் கூறுகிறது.

உணருரு வசித்தெனி னுணரா தின்மையா
மிருதிற னல்லது சிவசத் தாமென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே

(பதப்பொருள்)

| | |
|---|---|
| உரு | — அறிவாகிய இறைவனது சொரூபம் |
| உணர் எனில் | — (உயிர் உலகப் பொருளை சுட்டி அறிவது போல) சுட்டி அறியும் என்ருல் |
| அசித்தாம் | — (சடமாம்) அறிவில் பொருளாம் |
| உணராது (எனின்) | — (உயிர்) அறியாது என்ருல் |
| இன்மை ஆம் | — (முயற்கொம்பு போல அசத்தாம்) இல்பொருளாம் |
| இருதிறன் அல்லது | — (சடமும், அசத்துமாகிய) இரண்டு தன்மை அல்லாத |
| சிவ சத்து ஆம் என | — (சர்வப்பிரகாசக ஞானசொரூபமாகிய) சித்தும் (மூன்று காலத்திலுங் கெடாதிருப்பதாய) சத்தும் (ஆனந்தமும், நித்தியமும், பூரணமும்) ஆம் என்று |
| இரண்டு வகையின் இசைக்கும் உலகு | — இரண்டு தன்மையோடு (கூடிய சொருபமாக) உயர்ந்தோர் கூறுவர் |

(வி—ரை) முந்திய உரை ஆசிரியர்கள் கொண்டபாடம் "உணருருவ சத்தெனினுணராதின்மையினிரு" என்பதாகும். வடமொழிச் சூத்திரத்தையும், பொருட் பொருத்தத்தையும் நோக்க இப்பாடம் பிழைபட்ட பாடம் என்பது நன்கு தெரியும். "ஏகாரம்" ஈற்றசை. முன் சூத்திரத்தில் (தமி) இறைவன் கூறப்பட்டிருத்தலால், இச்சூத்திரத்தில் உரு என்பதை இறைனது சொரூபம் என்று கொள்ளப்பட்டது. என்னின் என்பதில் னகர வொற்றுக் கெட்டு நின்றது. அஃது உணராது என்பதுடனும் ஆம் என்பது அசித்து என்பதுடனும் கூட்டி உரைக்கப்பட்டது, உணர் என்பது வினைத்தொகை. அசித்து—சடம். உணராது, இல்லது என்பன முறையே உணராதது, இல்லாதது என்னும் பொருள் தந்து நின்றன. "உலகமென்பதுயர்ந்தோர் மாட்டே" என்றமையால் உலகம் என்பதற்கு உயர்ந்தோர் எனப்பொருள் உரைக்கப்பட்டது. சித்-அறிவு, சத்-உண்மை ஆகவே, சித்சத் என்பதுடன் ஆனந்தம், நித்தியம்-பூரணம் கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது "மன்" அசை. அஃது ஈண்டு ஒழியிசைக் கண் வந்தது, "ஏகாரம்" ஈற்றசை.

## கைவல்யம்

சென்மாந்த ரஞ்செய்த வினைகளுடனருமெனிற் செல்கால மிவனுண்டலோ
கன்மாறு பவநரக சொர்க்கமெனில் வருகின்ற காலத்து மிவனுண்டலோ
உன்மாதயர்தனு வுடல்கடவுளுடன் மருடவுடன் மாறி மாறியழியும்
தன்மாய வுடல்கெடினு மிவனிருப்பது கொண்டு சத்தென்ப தொக்குமகனே

இருளாக மூடுஞ்சுழுத்தியி லிராத்திரியி லிரவிசுடரற்ற பொழுது
மருளாம லிருளையும் பொருளையுந் தெரிகின்ற வகைகொண்டு சித்தாகுமே
பெருவாழ்வு மிக்கதா னேதன்னி டத்தினிற் போதபிரிய மதனால்
அருகாத பிரியஞ்சுகத்தில் வருமாதலா லானந்த மாமைந்தனே

## வேதாந்த சூடாமணி

நீகடவு சொரூப நிசஞ் சச்சிதானந்த நித்தியம் பூரணமாக நீ
நினைந்து கொள்ளே

## பிரம கீதை

சகமொடு சீவனீசன் சார்ந்துள விகார மின்றிச்
சுகமுடைச் சத்தாய்ச் சித்தாய்த் துகளின்றி நுண்ணிதாகி
யகமெனு முறைகட்குள்ளாயறிவரி தாகி யொன்றுந்
தகவுடைப் பரமந்தன்னி னொருமையை மறைகள் சாற்றும்

காண்டல் கேட்டல் கருதல் செயப்படுவா னலன்றான்
காண்டல் கேட்டல் கருதல் செயப்படுவா னொருத்தன்
றூண்டு சோதியினு லனல் சோம னருக்க னெல்லா
மாண்ட போதும் விளங்கு மனக் கரியாகி நின்றே

சித்த மத்தமித் திடத் தபாவமுந் தெரிந்திடுஞ்
சுத்த நற்சுழுத்தியிற் றுய்க்கு மாவை கண்டிடு
மத்த மித்தலும் பிறத்தலும் மிலா வபாவ பா
வத்தை விட்டகண்டமா யறிந்த போதடங்கவாம்

## பகவற் கீதை

போனவை யினிமேற் புகுத நின் றவையிப் பொழுதுபோ
நின்றவை யனைத்தும்
யானறிந்திருப்ப னியாவுமா மென்னை யுலகின்மற்றியாவரு
மறியார்
மானவெஞ் சிலையாய் வேண்டல் வேண்டாமை தன்னிலே
வருகுண மயக்காற்
றானமைந் துருவாய்ச் சனித்திடும் பொழுதே தந்த மெய்
யறிவு சார்ந்திடலால்

## ஈசுர கீதை

நானே மாயைதனைக் கடந்து நிற்பேன் ஞாலந்தனை யியற்றேன்
யேனை யனவு மெனையொழிய யாதோர்செயலு மில்லதனு
னே சகத்தை நடத்தியிடு நாதனென்று நடுவென்று
மானுவறிவோ ரறிந்திடுவரென்றே யருளிச் செய்தனனால்

### வாசிட்டம்

முனிய கன்றபின் னெயினர்கோன் றனியிடமுந்தி நன்மதி
யாலே
யனிச நானென்ப தாரென நாடின னடிமுதல் முடி யீறுந்
தனியு டம்பைநா னென்பது புதுமையாஞ் சடவுடல் காண்
கேளுன்
துனிசெ யிவ்வுட லசேதனந் தசைமுதற்றுன்னுமா தலினன்
றே

கரண மீரைந்து மன்னியஞ் சடமெனுங் கணக்கினு னென்றித்
திரளை னக்கில வுடன்முத னலன் சேடமேதென நோக்கில்
விரவு சீவனே சேடமா மின்னதும் வேறென்றாற் றெரிகின்ற
துரவி தானவே றென்றினுற் றெரியுமீ துயர்ந்த தத்துவமாகா

தெரிவதாகிய விதனையு மகற்றுவன் றெறி பொருளுணுமோ
பெரிது சேடமாய் விகற்பமற் றமலமாம் பேரறி வியாருகு
மரிய யன்சிவ னிந்திர னந்தகனுதியா மிடந் தோறும்
சுரி கொண்முத்தினுனுளெனை நிற்குமாற் றேறன்று
மிவ்வுயர்போதம்

### திருமந்திரம்

எல்லா மறியு மறிவு தனைவிட்டு
வெல்லா மறிந்து மிலாபமங் கில்லை
யெல்லா மறிந்த வறிவினை நானென்னி
லெல்லா மறிந்த விறையெனலாமே.




---

### ஏழாம் சூத்திரம்

[ஜீவ ஸ்வரூபம்]

#### அவதாரிகை

அறிவாகிய சத் (பிரத்யக்க பின்ன பிரஹ்மத்) தின் முன் உண்மையில் சகஜீவபரம் ஆகிய யாவும் சூன்யம் என்றும் (ஜீவன்) உயிர் அஞ்ஞதசையில் பந்தமடைவானென்றும் உலகத்தோடு சேருங்கால் உலகத்தையும் ஞானதசையில் இறைவனோடு சேருங்கால் இறைவனையும் அறிவானென்பதையும் இச்சூத்திரங் கூறுகிறது

யாவையுஞ் சூனியஞ் சத்தேதி ராகலிற்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா

(பதப்பொருள்)

| | |
|---|---|
| சத்து எதிர் | — (அறிவாகிய) சத்துக்கு எதிர் மறையான |
| யாவையுஞ்சூனியம் ஆதலின் | — அனைத்தும் இல்பொருளா (சூனிய) மாகலின் |
| சத்து அறியாது | — உள்பொருள் (அறிதற்கு ஒன்றும் இல்லாதபடியால் இல்பொருளாகிய சகசிவயரத்தை) அறியாது. |
| அசத்து இலது (ஆகலின்) | — இல்பொருள் (சூனியம்) இல்லாததாகலின் |
| அறியாது | — (உள்பொருளாகிய சத்தாகிய பிரஹ்மத்தை) அறியாது |
| இரண்டு அல்லாத ஆன்மா | — (சத்தும் அசத்துமாகிய) இரண்டுக்கும் விலக்ஷணம் அல்லாத உயிர் (ஜீவன்) |
| இருதிறன் அறிவு உள்ளது | — (உலகத்தைச் சேர்ந்தபோது உலகத்தை அறியும் அறிவும், இறைவனைச் சேர்ந்தபோது இறைவனை அறியும் அறிவுமாகிய) இரண்டு வகையான அறிவை யுடையது |

(வி—ரை)

சத்தே என்பதன் "ஏகாரம்" அசை. 'இரண்டும்' என்பதன் முற்றும்மை விகாரத்தால் தொக்கது, ஆகலின் என்பது இலது என்பதனோடும் கூட்டி உரைக்கப்பட்டது. அல்லாத என்பதுல்கரவொற்றும் ஈறும் கெட்டு நின்றது. உள்ளது என்பது ளகரவொற்றுக்கெட்டு நின்றது. உயிராகிய ஜீவன் சத்தும் அன்று அசத்தும் அன்று. அது சத்தாகிய பிரஹ்மத்தோடு

சேருங்கால் லக்ஷண விருத்தியினால் பிரஹ்மத்தை அறிதலும் அசத்தாகிய உலகத்தோடு சேருங்கால் உலகத்தை (விலக்ஷணமாக) அறிதலுமாகிய இரண்டு வகை அறிவையுடையது. "ஈண்டு நாநாவானவை சிறிதுமில்லை" என்பதாகியசுருதி பிரபஞ்சத்தின் திரைகாலிக அபாவங் கூறுகின்றது. அநுபவ சித்தமான பிரபஞ்சத்திற்குத் திரைகாலிக அபாவங் கூடாதாதலான் பிரபஞ்சத்தைச் சொரூபமாக நிஷேதஞ் செய்யவில்லை. மற்றெங்ஙனம் நிஷேதஞ் செய்ததோவெனின்? பிரபஞ்சம் பாரமார்த்திகமன்று ஆகலான், பாரமார்த்திகத்வ விசிஷ்டப் பிரபஞ்சத்திற்குத் திரைகாலிக அபாவஞ் சுருதி கூறிற்று: சிலர் இல்லதற்குத் தோற்ற மின்மையின் என்ற ஏதுவால் உள்ளதற்கே தோற்றமுண்டாகிறது எனக்கூறுகின்றனர் அங்ஙனமாயின் அவ் வாக்கியம் கயிற்றரவு முதலியவற்றில் விபசரிக்கின்றது. கயிற்றரவு முதலியவற்றிற்கு தோற்றமிருப்பதாலென்க. இன்மை மூன்று வகைப்படும் சொல்மாத்திரையாயுள்ளது. இதற்குவமானம் வான்மலர், மலடிமகனும். சொல்லுந் தோற்றமுமாயிருப்பது இதில் ஒன்று காரணத்தை நோக்கிய போது காரியந்தோன்றாதிருத்தலும். மற்றொன்று தோன்றுதலுமாம். முன்னையதற்கு உவமானம் கயிற்றரவும் பின்னையதற்கு உவமானம் கானனீரும் ஆம். இங்ஙனமாக இல்லதற்குத் தோற்ற மின்மையின் என்றது எங்ஙனம் பொருந்தும். இதனால் பாரமார்த்திகத்வ விசிஷ்டப் பிரபஞ்சத்தின் அபாவம் சுருதிசித்தமாம். உயிராகிய ஜீவனுக்கு அஞ்ஞான முதலிய ஏழவஸ்தைகளில் ஐந்தாவது அவஸ்தையாகிற அபரோக்ஷ சாட்சாத் காரத்தில் தான் ஜடமல்லவென்றும் சச்சிதானந்த சொரூபபரமசிவனே தானென்றும் இலக்ஷணையால் அறிவதால் அவனுக்கேபந்த நிவர்த்தியும் சுகப்பிராப்தியாகிய மோக்ஷமுமாம்.

## கைவல்யம்

நித்தியம் பூரணமேகம் பரமார்த்தம் பரப்பிரம நிதானஞ்
சாந்தம்

சத்தியங் கேவலந்துரியஞ் சமந்திருக்குக் கூடஸ்தன் சாட்சி
போதம்

சுத்தமிலக் கியஞ்சநா தனஞ்சீவன் றத்துவம்விண் சோதி யான்மா
மூத்தம்விபு சூக்குமமென் றிவ்வண்ணம் விதிகுணங்கண் மொழியும்வேதம்

அசலநிரஞ் சனமமிர்த மப்பிரமே யம்விமலம் வசனா தீதம்
அசட மநா மயமசங்க மதுலநிரந் தரமகோ சரம கண்டம்
அசமநந்த மவிநாசி நிர்க்குண நிட்கள நிரவயவ மநாதி
அசரீர மவிகார மத்துவித மெனவிலக் காமநேக மூண்டே

விருத்தியும் பலமுங் கூடும் விகாரமே மனமென் பார்கள்
கருத்தெழுவிருத்தி வேண்டுங் கணக்கினுன் மனத்திற் கெட்டும்
வருத்திய பலமா மிந்த மனத்திற்கெட் டாது கண் டாய்
அருத்தமிப் படியென் றைய மகன்றுநீ தெளிந் திடாயே

## பிரம கீதை

எப்பொருளு மாயையினா லெனச்சிலவ ரியம்புவர்கள்
மெய்ப்பரமன் றனையொழிய வேறொருமா யையு மில்லை
ஒப்பரிய பரனொழிய வொருமாயை யுண்டாகில்
அப்பரமன் றன்பெருமைக் கதுநேரே யழிவன்றோ

## பகவற் கீதை

உணர்வவிகாரியென் றும் வினையெலா முடம்பி னோடே
புணர்வன வென் றுங் கண்டான் பொய்யில்லா மெய்யைக் கண்டா
னிணர்மலர் முடியா யெல்லா வினைகளுஞ் செயினு மான்மா
குணமிலி யாத லாலே யவற்றொடுங் கூடி னில்லான்

## ஈசுர கீதை

அறிவென வுரைக்கப்பட்ட தவனுடை யுருவு தன்னை
ருறை விலா நிமலன் சாந்த னுண்ணிய னென்று முள்ளோன்
செறியுமெப் பொருட்கு முள்ளாய்ச்சின் மயமாயே சான்றாய்ப்
பிறிதரு மவித்தைக்கெட்டாப் பெற்றிய னென்றானீசன்

## வாசிட்டம்

மெத்துநின்ற வாதனையை விட்டான் மேலா நலமுளதாஞ்
சத்தினசத்தி னிடை நின்று சைதந் நியத்திற் சாட்டியத்தி
லொத்து நடுநின்றிலைவதுவே யுள்ள மாகுமிவ் வுள்ளஞ்
சித்தின் முயல்வாற் சித்தாகுஞ் சடத்தின்முயல்வாற் சடமா
கும்.

பந்த மில்லை வீடில்லைப் படர் தீர் பிரமமே யுளதா
மந்த வைக்கிய மில்லையிரண் டில்லை யறிவே வளர்ந்தெழுந்த
சிந்து தரங்கப்பங்கத்தாற் றிகழுகின்ற நீர் போல
வந்த மில்லா வறிவுருவே விளங்கு மயலொன்றில தாகும்

## சிவானந்த மாலை

எங்குஞ் சிவமொழிய வில்லையவன் றன்னுணை
யங்கந் திரள்கருவி யாணவமாம்—பொங்கு மிருண்
மைசெய்த மாமாயை மாயைவினை மற்றனைத்தும்
பொய் பொய் பொய் பொய் பொய் பொய் பொய்

## கந்தரநுபூதி

இல்லேயெனு மாயையி லிட்டனை

## அத்துவிதரச மஞ்சரி

அஞ்ஞா ந மேயில்லை யிவ்வுலக முளதாயென் றறைவதெங்கே

---

## எட்டாம் சூத்திரம்

[மோக்ஷ உபாயம்]

### அவதாரிகை

தேகாத்ம பாவத்தில் பந்தப்பட்ட உயிர் எப்படி முத்தியடையு மேனின்? அறிவாகிய இறைவன் குருவாகிவந்து சாமவேதமகா வாக்கியத்தை உபதேசிக்க அவ்வுபதேசத்தால் அகம் பிரஹ்மாஸ்மி என்னும் அபரோக்ஷ ஞாநமுண்டாக அவ்வுயிர் முத்தி யடையும் என இச்சூத்திரங் கூறுகிறது.

ஐம்புல வேடரினயர்ந்தனை வளர் ந்தெனத்
தம்முதற் குருவமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டந்நிய மின்மையி னரன்கழல் செலுமே

(பதப்பொருள்)

தவத்தினில் — (சிதாபாசர்களாகிய உயிர்கள் முற்பவங்களிற் செய்த நிஷ்காம) தவத்தினால்

தம் முதல் — தமது (உள்ளத்தகலாது நின்று ஆண்டு வந்த பிரத்யக்க பின்ன) இறைவன்

(தம்) குருவுமாய் — தமது குருவாகி (ஞானசிரியராகி)

ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்ந்தனை எனஉணர்த்த — ஐம்பொறிகளாகிய வேடர்களோடு (சேர்ந்து) வளர்ந்து (நீ உனது எதார்த்த சொருபத்தை) மறந்து விட்டனை (உலக காரண இறைவனே நீயாக இருக்கிறாய்) என்று (சாமவேதமகாவாக்கியத்தை இலக்ஷணையால்) உபதேசிக்க

விட்டு — (பிரஹ்மமாயும் சாக்ஷியாயு முள்ள சேதனபாகமான இலக்ஷியார்த்தத்தை விடாமல்) வாச்சியார்த்தத்திலுள்ள கிஞ்சிஞ்ஞத்வாதி விரோத பாகத்தை விட்டு

அன்னியம் இன்மையின் — (பிரத்யக்க பின்ன பிரஹ்ம பின்னமாக) வேறு ஒன்றும் இல்லாமையால்

அரன்கழல் செல்லும் — (அறிவாகிய) இறைவனுடைய அடிகளின் கண் செல்லும் (நான் பிரஹ்மமாக இருக்கிறேன் என்று (சிந்திக்கும்) அபரோக்ஷசாக்ஷாத்காரத்தை அடையும்

(வி—ரை)

புலம் என்பது ஆகுபெயர் அவற்றைப்பற்றும் பொறிகளுக்கு ஆயினமையால். "ஐயம்புலவேடரின் வளர்ந்து அயர்ந்தனை" என்றது வைராக்கியாதிசாதனசதுட்டய முடைய உயிர்கள் ஒவ்வொன்றையும் பார்த்து ஆசிரியர், உனது சொ

ரூபாஞ்ஞானத்தால் ஐம்பொறிகளாகிய வேடர்களோடு சேர்ந்து சோக மோக மடைந்தனை என்பதாம். உணர்த்த என்றது இனி அஞ்ஞானம்மோசம் போகாமல், சாமவேதசாந் தோக்கிய உபநிடதத்தில் உத்தாலகமுனிவர் தனது புத்திர னை சுவேதகேதுவுக்குச் சகத்தினுற்பத்தி பண்ணுகின்ற ஈசுரனைக்காட்டி "தத்துவமசி" என்றருளிச் செய்ததை. அவ் வாக்கியத்தில் "தத்" என்பது, அது. சகத்தினுற்பத்தி பண்ணுகின்ற சர்வசக்தி சர்வஞ்ஞத்வாதிதர்மசகித ஈசுரன். "துவம்" என்பது நீ, அற்பசக்தி அற்பஞ்ஞத்வாதி தர்மங் களையுடைய (ஜீவன்) உயிர். "அசி" என்பது இங்கே (அது நீயாக) இருக்கின்றாய் என்பது. அதனது வாச்சியார்த்தமாம். இப்படிச் சொன்னதனால் ஈசுரனுக்கும் உயிருக்கும் ஏகத்வம் வாச்சியார்த்தத்தால் பாதமாகின்றது. அது கூடாதுஎன்னை? ஈசுவரன் சர்வசக்தி மான் சர்வஞ்ஞன், சுதந்திரன், கர்மாதீதன், சீவன் அற்பஞ்ஞன் கர்மவயப்பட்டவன் பாதந்திரன் இவர்கள் ஏகமென்று சொல்லுதல் கூடாது. வாக்கியார்த்தங்கள் விரோத மாமேல், விரோத பரிகாரமாக அர்த்தமாகும்படிக்கு இலக்ஷணை கொள்ளல்வேண்டும். அவ்விலக்ஷணை விட்டலக்ஷணை, விடாத லக்ஷணை, விட்டுவிடாத இலக்ஷணை என மூன்றுமாகும். அவ்வில க்ஷணைகளுள், விட்டுவிடாத(பாகத்தியாக)இலக்கணையே மகா வாக்கியங்களுக்கு உபயோகமாதலின் தத்துவமசி என்னும் மகா வாக்கியத்தில் "தத்" "துவம்" என்னும் பதத்திலுள்ள விரோதாம்சங்களான சர்வஞ்ஞத் வாதி கிஞ்சிஞ்த்வாதி தர்மங்களை விடுத்து அவிரோதமான சேதனபாகத்தில் "அசி" என்னும் பதம், கூடஸ்த பிரஹ்மங் களுக்கு (அறிவு இறைவனுக்கு) ஐக்கியமாம் என்று உரைக்கும். தவத்தாற்றான் இறைவன் குருவாய் உணர்த்துவனென்பதை அறிவிக்கவே "தவத்தினில்" என்றனர், தவத்தினில் என்ப தில் தவமாவது உற்ற நோய் நோன்றலுயிர்க்குறுகண் செய் யாமை. மனம் பொறிகட் கொருமையே முக்கிய தவம், தம் இறைவன் தம் குருவாகத் தமது அறிவிற்கு அறிவாயிருப்ப தால் மானிட சரீரத்தோடு தோன்றி என்று கூறாமல் "குருவுமாய்" என்று கூறினர். தம் என்பது குருவுடனும் கூட்டி உரைக்கப்பட்டது. தத்துவம்பத வாச்சியார்த்தங்களான சீவ ஈசுவரர்களின் விரோத பாகத்தை பாகத்தியாக இலக்ஷணை யால் விடவே (கூடஸ்தபிரஹ்மங்களுக்கு) உயிர் இறைவனுக்கு ஐக்கியமாம் ஆதலால் உயிர் அபரோக்ஷ சாக்ஷாத் காரத்தை

அடையும் என்பதை உணர்த்தவே " அன்னிய மின்மையினரன் கழல் செலும் " என்றனர். அரன்கழல் என்றது உபசார வழக்கு " சேவடிபடரும் " என்புழிப்போல. செல்லுமே என்பதில் லகரவொற்று விகாரத்தால் கெட்டு நின்றது ஏகாரம் ஈற்றசை.

## கைவல்யம்

தஞ்சமாங் குருவுஞ் சொன்ன தத்துவ வழிதப் பாமற்
பஞ்சகோ சமுங் கடந்து பாழையுந் தள்ளி யுள்ளிற்
கொஞ்சமா மிருப்பும் விட்டுக் கூடஸ்தன் பிரம மென்னு
நெஞ்சமு நழுவி யொன்றாய் நின்றபூ ரணத்தைக் கண்டான்
என்னுடைக் குருவாய்த் தோன்று மீசனை யிறைஞ்
சினேனே

## பிரம கீதை

தற்பதப் பொருளா யுள்ள வறிவோடே கூடு தற்கு
நிற்பதொன் றில்லையாய்ச் சொல்லப் பட்ட கா யாதி விட்டு
மெய்ப்படத் துரியத் தோடே யுடனுறை வேறி லாத
சிற்பொரு ளேயே தத்தெ மசியெனச் செப்பு மன்றே

## பகவற் கீதை

வேத நாலுநின் றுரை செய்தாலு மொன்
றோத லாவதன் றுலக றிந்த தோ
காத லாலெனக் கினிய தோழனீ
யாத லாலுனக் கறிய வோதினேன்

## ஈசுர கீதை

அரியுருவுகண்டகம கிழ்ந்த வளவிற்கே
பெரியபரி வோடு பிறை சூடியபிரான் முன்
சுருதிமுடி வோ துபொருள் சொல்லுத றுணிந்தே
கருதவரி யான்முனிவர் கண்ணில் வெளி நின்றான்

## வாசிட்டம்

ஆசான் மொழியா னூற்பொருளா லன்றிப்பெறவு மரிதாகுந்
தேசார் குருநூன் மாணக்கன் சிறக்க விம்மூ வருங் கூடிற்

பாசா தீதப் பரமெய்தும் பன்னு ணீங்கா விக் கூட்ட
மேசா வுணர்வைத் தரும்பகற்போ தெல்லாத் தொழிலுந்
தருவதுபோல்

## திருமந்திரம்

ஆகிய அச்சோயங் தேவதத் தன்னிடத்
தாகிய விட்டு விடாத லக்கணைத்
தாகுப சாந்தமே தொந்தத் தசியென்ப
வாகிய சீவன் பரன் சிவ னருமே

## (திருநாவுக்கரசு சுவாமிகள்) தேவாரம்

நிற்பனவு நடப்பனவு நிலனு நீரு நெருப்பி னொடு காற்றாகி
நெடுவானாகி
யற்பமொடு பெருமையு மாயருமையாகி யன்புடையார்க்
கெளிமையதாயளக்கலாகாத்
தற்பரமாய்ச் சதாசிவமாய்த் தானுமியானுமாகிய நின்ற தன்
மையனை நன்மையோடும்
பொற்புடைய பேசக்கடவோம் பேயர் பேசுவன பேசுதுமோ
பிழையற்றோமோ

## சசிவன்னபோதம்

ஞா னியை நான் சுரனென தொழிக ஞாலமுய நாதனருளால்
மேவியது கொண்டு தனை நல்கவரு மென்றறையும் வேத
முடிவே

---

## ஒன்பதாம் சூத்திரம்

[ஞானப் பிரதிபந்தக நிவிர்த்தி]

[அவதாரிகை]

குருவால் உபதேசிக்கப் பெற்ற மாணக்கனுக்கு ஞானப் பிரதிபந்தங்களான சென்ற, வரு, நிகழ்கால வாசனையால் ஞானம் தடைப்படின் உபரதி, வைராக்கியம் ஈசுவரத் தியானம் இவை களால் தடை ஒழிந்து பிரமான்ம வைக்கிய ஞானம் உண்டாகும் என இச்சூத்திரங் கூறுகிறது.

ஊனக் கண்பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
யுராத்துனைத் தேர்த்தெனப் பாசமோருவ
தண் ணிழலாம் பதி விதி யெண்ணுமஞ் செழுத்தே

(பதப் பொருள்)

ஊனக்கண்ணும் — (யான் என்னும் அகங்காரத்தையுடைய உயிரின்) குறைந்த அறிவும்

பாசமும் — (உலகப்பற்றையுடைய உயிரின்) மல அறிவும்

உணராப்பதியை — அறியாத இறைவனை

ஞானக்கண்ணில் — இறைவனை உணரும் அறிவால்

சிந்தை நாடி — உள்ளத்தில் ஆராய்ந்ததால்

உராதுனை தேர்த்து என — (புவியில்) பொருந்தாது வேகமாகச் செல்கின்ற பேய்த்தேரின் தன்மையைப் போல

பாசம் ஒருவ — பாச மலம் (அகங்காரமும் உலகப்பற்றும்) நீங்க

பதிதண் நிழல் ஆம்— இறைவனது தண்ணிய அருள் (பிரமான்ம வைக்கிய ஞானம்) உண்டாகும்

அஞ்செழுத்து விதி எண்ணும் — (அவ்வருளாகிய பிரமான்ம வைக்கிய ஞானநம் அடையும் வரையில் உயிர்) பஞ்சாக்ஷரத்தை விதிப்படி ஜெபித்து (ஆசிரியர் உபதேசித்த முறைப்படி மனன வாயிலாக) தியாகிக்கும்

(வி-ரை) அறிவினைக்'கண்' என்று கூறுவது வழக்கு, உதாரணம்—அகக்கண். பாசம்—மலம் அஃதாவது உலகப் பற்று, பாசம் என்பது ஆகுபெயர். அதனையுடைய அறிவிற்கு ஆயினமையால், உணராத என்பது ஈறுகெட்டு நின்றது, கண்ணினின் என்பதன் முதல் இன் 'சாரியை' இரண்டாம் 'இன்' ஆல் என்னும் பொருளில் வந்தது. சிந்தை—உள்ளம்,

அது சிந்தித்தலால் சிந்தை எனப் பெயர் பெற்றது. நாடி என்பது வினையெச்சம், மழைபெய்து பயிர் விளைந்தது என்புழிப் பெய்து என்னும் வினையெச்சம் பெய்ததால் என்னும் பொருள் தந்து நிற்றல்போல் நாடியென்னும் வினையெச்சம் நாடியதால் என்னும் பொருள் தந்து நின்றது. நாடி என்பதனை இகரவீற்று முன்னிலை, ஏவல் என்று உரைப்பாரும் உளர். முன்னிலைப் பொருள் ஈண்டுப் பொருந்தாது. ஊராது என்பது ஈறுகெட்டு நின்றது. ஊராவல்—பொருந்துதல், பேய்த்தேர்—கானல், பேய்போலப் பூமியில் பொருந்தாது. தாகமுற்றோன் அதனை அடுத்துச் செல்லச் செல்ல அது தூரத் தூரச் சென்று கொண்டிருக்கும் அதுபற்றி அது பேய்த்தேர் எனப் பெயர் பெற்றது. ஏகாரம் ஈற்றசை பிராந்தியினாற் கானலிற்றோன்றும் நீர் அவற்றிற்குரிய முதற் காரணத்தைக் கண்டவிடத்துத் தடையின்றி நீங்கி விடுதல்போல பிராந்தியுலகமாகிய பாசத்திற்கு முதற் காரணமாகிய இறைவனை பிரஹ்மாகாரவிருத்தி ஞானத்தினால் தானாகக் கண்டவிடத்துப் பாசமும், பிராந்திமயமாகிய உலகமும் அழியுமென்பார் ஞானக்கண்ணினிற் சிந்தைநாடி யூராத்தனைத் தேர்த்தெனப்பாசம் ஒருவனென்றார். இறைவன் அருளாகிய பிரஹ்மாகாரவிருத்தி உண்டாவதற்கு ஆசிரியர் உபதேசித்த முறைப்படி மன்னனவாயிலாக பஞ்சாக்ஷர ஜெபம் தியானம் செய்ய வேண்டுமென்பார் நண்ணிழலாம்பதி விதியெண்ணு மஞ்செழுத்தே என்றார்.

## வேதாந்த சூடாமணி

பகர்ந்த வுயிருண்மை விலக்கின் வரும்
பூதப்பதிபந்தம் வர்த்தமானப் பதிபந்தம்பி
னிகழ்ந்த வாகாமியப்பதி பந்தங்களென முத்திறேய
மொடுதுறந்து குருபரனை யறிந்தடைந்து
மகிழ்ந்து சவுனதிக முற்றிடினு முன்னுகர்ந்த வஸ்தாதி
விடயசுக வாதனையாற் றிரும்
புகுந்து மாகிலைகலக்கி யுயிருண்மை யுருமற் போக்கியி
டறனைப் பூதப்பதிபந்த மென்பர்
மடிவிடயா சத்தியபி மானமொடு குதர்க்க மற்றுஞ்
சிற்றினஞ் சேர்தல் சபலத்துவாதி
யடைதலின் மெய்தெரிந்து முயிருண்மை யுருத்தழித்த
லதுவாகும் வர்த்தமானப் பதிபந்தங்காண்

விடலரிய சாநமினுஞ் சிலவடைந் தாலன்றி விடா துபிர
மாதியுல கிச்சை யெனுந்தோட
மொடு மருவிமறைப் பொருளை யுணர்ந்திடினு மான்ம
வுண்மையுறு தழித்தலாகாமியப் பதிபந்தம்

## கைவல்யம்

தடையெவை யெனி லஞ்ஞான சந்தேக விபரீதங்கள்
படர் செயுமிந்த மூன்றும்பல சன்மப் பழக்கத்தாலே
உடனுடன் வரும்வந் தக்கா லுயர்ஞானங் கெடுமிவற்றைத்
திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித் தறெளித லாலே

## பிரம கீதை

போதக் கண்ணிற் பூதம் பொய்யே மெய்யே யாம்
பேதக் கடகுட் டியமா வ்கழிவிற் பேதந் தா
ஞேதப் படுசுத் திகை வெள்ளியின் மெய்யுணர்காலஞ்
சேதப் படுமக் கனவிற் பெரிதுந் திடமுண்டோ

## பகவற் கீதை

ஊழாலே வருமிந்த மாயையினு லேயுள்ளம்
பாழாக வறிவிங்கே பறியுண்டு கெறிகின்றோர்
வீழாத தீவினையே வினையாக விளைக்கின்றார்
கிழாஞே ரினையடையா ரடைவாருஞ் சிலருளர் கேள்

## ஈசுர கீதை

யோகஞ் செயஞானம் முளதாகு மதனுலே
யாகும் மிதயோகம்பினை யதுவேசெய லுறுவோன்
சோகம் முறுபயனுமவை யெய்தா தளவில்லாப்
போகம் முழுதெல்லாம் புணர்கின்று னிவனே யாம்

## வாசிட்டம்

நாமுட லென்னு மாசான் ஞானக் கண்குரு டாய்ப் போகுந்
தோமுறு மதனைத் தூரத் தூர்ப்ப ரேற் சோதிஞான
மாமுகி லிலாநிலாப் போல் வயங் கிடு மினைய கண்ணு
லேமுறு பிறவிவேலை யிருங் கரை யெளிது தோன்றும்

## திருமந்திரம்

பெருக்கப் பிதற்றிலென் பேய்த்தேர் நினைக்கென்
விரித்த பொருட்கெல்லாம் வித்தாவ துள்ளம்
பெருக்கிற் பெருக்குஞ் சுருக்கிற் சுருக்கு
மருத்தமு மத்தனை யாய்ந்துகொள் வார்க்கே
அருட்கண் ணிலாதார்க் கரும்பொரு டோன்று
வருட்கண் ணுளோர்க்கெதிர் தோன்று மரனே
யிருட்கண்ணி னோர்க்கங் கிரவியுந் தோன்று
தெருட்கண்ணி னோர்க்கெங்குஞ் சீரொளி யாமே

## தேவாரம்

காத லாகிக் கசிந்து கண் ணீர் மல்கி
யோது வார்தமை நன் னெறிக் குய்ப்பது
வேத நான் கினு மெய்ப் பொரு ளாவது
நாத னும நமச் சிவாய வே

---

## பத்தாம் சூத்திரம்

[ஞானியை பிரபஞ்சம் தொடரா]

(அவதாரிகை)

பஞ்சாக்ஷர ஜெப (சிரவணமனன) தியானாதிகளால் தடை ஒழிந்து இறைவனை தனது சொரூபமாக வறிந்த உயிரை [பிரத்யக்க பின்ன பிரஹ்ம சாக்ஷாத்காரமடைந்த ஜீவன் முக்தனை) ஆணவ மலம் மாயா மலம் கன்ம மலம் (பரிசியா) பொருந்தா என இச் சூத்திரங் கூறுகிறது.

அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறை பணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே

(பதப் பொருள்)

தானே — (உயிர் யசுர்வேதப் பிருக தாரண்ய வுபநிடதவாக்கியமான அகம்பிரஹ்மாஸ்மி என்னும் மகா வாக்கியத்தின் அகம்பத சோதனையால் அகம்பத லக்ஷியார்த்தப் பிரத்தியகான்மாவாகிய) தானே

அவனே — (உயிர் பிரஹ்மபுத்த சோதனையால் பிரஹ்ம பத லக்ஷியார்த்தப்) பிரஹ்மமே

ஆகிய அ நெறி — (அஸ்மி பதத்தால் இருக்கிறேன் என்பது) ஆகிய அவ்வழி

ஏகன் ஆகி — (உயிர் இறைவன் என்று இரண்டு இல்லாமல்) ஒருவனே (ஐக்கியமே) யாகி

இறைபணி நிற்க — (இறைவனது சொரூபமும் தனது சொரூபமும் ஒன்றே என்று உணர்ந்த (அறிஞன் பிராரத்த தேகமுள்ளளவுமியற்றும் கிரிகைகள் யாவும் கரண நிஷ்ட கர்த்திருதவமாய்) இறைவ (குருவி)னது பணியாகவே செய்து நிற்க

மலமாயையோடு வல்வினையின்று — ஆணவ மலத்தோடும் மாயாமலத்தோடும் வலியதான கன்ம மலமும் இல்லையாகும்.

(வி-ரை) அவனே என்பவற்றின் 'ஏகாரம்' இரண்டும் மற்றவற்றினின்றும் பிரித்தலால் பிரிநிலைக்கண் வந்தன. யான் எனதென்னும் நினைப்பால் இறைவன் உயிரே யாவன். வேறொன்றும் ஆகான். யான் எனதென்னும் விசேடணங்களான கிஞ்சிஞ்ஞத்வாதிகளையும் ஈசுரனது சர்வஞ்ஞத்வாதிகளையும்விட 'உயிர்' இறைவனேயாதும், வேறொன்றும் ஆகாது. இவ்வுண்மையை உணர்த்தவே இரண்டிடத்தும் ஏகாரம் சேர்க்கப்பட்டுள்ளது. அவ்வழி—அவ்விடத்து—அப்பொழுது தான் இறைவனே என்று உணரும் முன்னர், 'யான்' தன்புதைப் பற்றி நின்றமையால் உயிர் ஒரு பொருள் போலவும், ஞானாசிரியர் உபதேசித்த மகாவாக்கிய பிரபாவத்தால் தான் இறைவனை தனது சொரூபமாக வுணர்ந்த பின்னர்யான்என்பதாதி விசேடணம் சங்கள் நீங்கி நின்றமையால் இரண்டு இல்லை என்பதை உணர்த்தவே 'ஏகனாகி' என்றார். பணி — தொழில் ஏகனானபின் வேறு இல்லையானமையால் சொரூப சாக்ஷாத்காரமடைந்த அவ்வுயிர் நின்ற உடம்பின் செயல்களெல்லாம் இறை (குரு) பணியேயாகும். தன் என்பது அசை. பிராரத்த வினைப்பயன் அனுபவிக்கப்பட்டே தீருமென்று சொல்லப்படுகின்றமையால் அதனை வல்வினை என்றார். ஏகாரம் ஈற்றசை.

அது சிந்தித்தலால் சிந்தை எனப் பெயர் பெற்றது. நாடி என்பது வினையெச்சம், மழைபெய்து பயிர் விளைந்தது என்புழிப் பெய்து என்னும் வினையெச்சம் பெய்ததால் என்னும் பொருள் தந்து நிற்றல்போல நாடியென்னும் வினையெச்சம் நாடியதால் என்னும் பொருள் தந்து நின்றது. நாடி என்பதனை இகரவீற்று முன்னிலை, ஏவல் என்று உரைப்பாரும் உளர். முன்னிலைப் பொருள் ஈண்டுப் பொருந்தாது. உராது என்பது ஈறுகெட்டு நின்றது. உராவல்—பொருந்துதல், பேய்த்தேர்—கானல், பேய்போலப் பூமியில் பொருந்தாது. தாகமுற்றோன் அதனை அடுத்துச் செல்லச் செல்ல அது ஆரத் தூரச் சென்று கொண்டிருக்கும் அதுபற்றி அது பேய்த்தேர் எனப் பெயர் பெற்றது. ஏகாரம் ஈற்றசை பிராந்தியினாற் கானலிற்றோன்றும் நீர் அவற்றிற்குரிய முதற் காரணத்தைக் கண்டவிடத்துத் தடையின்றி நீங்கி விடுதல்போல பிராந்தியுலகமாகிய பாசத்திற்கு முதற் காரணமாகிய இறைவனை பிரஹ்மாகாரவிருத்தி ஞானத்தினால் தானாகக் கண்டவிடத்துப் பாசமும், பிராந்திமயமாகிய உலகமும் அழியுமென்பார் ஞானக்கண்ணினிற் சிந்தைநாடி யுராத்துனைத் தேர்த்தெனப்பாசம் ஒருவவென்றார். இறைவன் அருளாகிய பிரஹ்மாகாரவிருத்தி உண்டாவதற்கு ஆசிரியர் உபதேசித்த முறைப்படி மன்ன வாயிலாக பஞ்சாக்ஷர ஜெபம் தியானம் செய்ய வேண்டுமென்பார் தண்ணிழலாம்பதி விதியெண்ணு மஞ்செழுத்தே என்றார்.

## வேதாந்த சூடாமணி

பகர்ந்த வுயிருண்மை விலக்காக வரும்
பூதப்பதிபந்தம் வர்த்தமானப் பதிபந்தம்பி
னிகழ்ந்த வாகாமியப்பதி பந்தங்களென முத்திநேய
மொடுதுறந்து குருபரனை யறிந்தடைந்து
மகிழ்ந்து சவுஞ்ஞிக முற்றிடினு முன்னுகர்ந்த வந்தாதி
விடயசுக வாதனையாற் றினமும்
புகுந்து மனநிலைகலக்கி யுயிருண்மை யுருமற் போக்கியி
டறனைப் பூதப்பதிபந்த மென்பர்



மடிவிடயா சத்தியபி மானமொடு குதர்க்க மறுகுறு
சிற்றினஞ் சேர்தல் சபலத்துவாதி
யடைதலின் மெய்தெரிந்து முயிருண்மை யுருதழித்த
லதுவாகும் வர்த்தமானப் பதிபந்தங்காண்

விடலரிய சாநமினுஞ் சிலவடைந் தாலன்றி விடா துபிர
மாதியுல கிச்சை யெனுந்தோட
மொடு மருவிமறைப் பொருளை யுணர்ந்திடினு மான்ம
வுண்மையுறு தழித்தலாகாமியப் பதிபந்தம்

## கைவல்யம்

தடையெவ்வை யெனி லஞ்ஞாந சந்தேக விபரீதங்கள்
படர் செயுமிந்த மூன்றும்பல சன்மப் பழக்கத்தாலே
உடனுடன் வரும்வந் தக்கா லுயர்ஞானங் கெடுமிவற்றைத்
திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித் தறெளித லாலே

## பிரம கீதை

போதக் கண்ணிற் பூதம் பொய்யே மெய்யே யாம்
பேதக் கடகுட் டியமா ங்கழிவிற் பேதந் தா
ஞேதப் படுசுத் திகை வெள்ளியின் மெய்யுணர்காலஞ்
சேதப் படுமக் கனவிற் பெரிதுந் திடமுண்டோ

## பகவற் கீதை

ஊழாலே வருமிந்த மாயையினு லேயுள்ளம்
பாழாக வறிவிங்கே பறியுண்டு நெறிநின்றோர்
வீழாத தீவினையே வினையாக விளக்கின்றார்
கீழானே ரெனையடையா ரடைவாருஞ் சிலருளர் கேள்

## ஈசுர கீதை

யோகஞ் செயஞானம் முளதாகு மதனாலே
யாகும் மிதயோகம்பினை யதுவேசெய லுறுவோன்
சோகம் முறுபயனுமவை யெய்தா தளவில்லாய்
போகம் முழுதெல்லாம் புணர்கின்று னிவனே யாம்

## வாசிட்டம்

காமுட லென்னு மாசான் ஞானக் கண்குரு டாய்ப் போகுந்
தோமுறு மதனைத் தூரத் தூர்ப்ப ரேற் சோதிஞான
மாமுகி லிலாகிலாப் போல் வயங் கிடு மினைய கண்ணு
லேமுறு பிறவிவேலை யிருங் கரை யெளிது தோன்றும்

## திருமந்திரம்

*பெருக்கப் பிதற்றிலென் பேய்த்தேர் நினைக்தென்*
*விரித்த பொருட்கெல்லாம் வித்தாவ துள்ளம்*
*பெருக்கிற் பெருக்குஞ் சுருக்கிற் சுருக்கு*
*மருத்தமு மத்தனை யாய்ந்துகொள் வார்க்கே*
*அருட்கண் ணிலா தார்க் கரும்பொரு டோன்று*
*வருட்கண் ணுளோர்க்கெதிர் தோன்று மரனே*
*யிருட்கண்ணி னோர்க்கங் கிரவியுந் தோன்று*
*தெருட்கண்ணி னோர்க்கெங்குஞ் சீரொளி யாமே*

## தேவாரம்

*காத லாகிக் கசிந்து கண் ணீர் மல்கி*
*யோது வார்தமை நன் னெறிக் குய்ப்பது*
*வேத நான் கினு மெய்ப் பொரு ளாவது*
*நாத னும நமச் சிவாய வே*




---

## பத்தாம் சூத்திரம்

*[ஞானியை பிரபஞ்சம் தொடாா]*

(அவதாரிகை)

பஞ்சாக்ஷர ஜேப (சிரவணமனன) தியானுதிகளால் தடை ஒழிந்து இறைவனை தனது சோரூபமாக வறிந்த உயிரை [பிரத்யக்க பின்ன பிரஹ்ம சாக்ஷாத்காரமடைந்த ஜீவன் முக்தனை) ஆணவ மலம் மாயா மலம் கன்ம மலம் (பரிசியா) போருந்தா என இச் சூத்திரங் கூறுகிறது.

அவ்வனே தானே யாகிய வந்நெறி
யேக ஞகி யிறை பணி நிற்க
மலமாயை தன்னெடு வல்வினை யின்றே

*(பதப் பொருள்)*

*தானே — (உயிர் யசுர்வேதப் பிருக தாரண்ய வுபநிடதவாக்கியமான அகம்பிரஹ்மாஸ்மி என்னும் மகா வாக்கியத்தின் அகம்பத சோதனையால் அகம்பத லக்ஷியார்த்தப் பிரத்தியகான்மாவாகிய) தானே*

அவனே — (உயிர் பிரஹ்மபத சோதனையால் பிரஹ்ம பத லக்ஷியார்த்தப்) பிரஹ்மமே

ஆகிய அ நெறி — (அஸ்மி பதத்தால் இருக்கிறேன் என்பது) ஆகிய அவ்வழி

ஏகன் ஆகி — (உயிர் இறைவன் என்று இரண்டு இல்லாமல்) ஒருவனே (ஐக்கியமே) யாகி

இறைபணி நிற்க— (இறைவனது சொரூபமும் தனது சொரூபமும் ஒன்றே என்று உணர்ந்த (அறிஞன் பிராரத்த தேகமுள்ளளவுமியற்றுங் கிரிகைகள் யாவும் காண நிஷ்ட கர்த்திருதவமாய்) இறைவ (குருவி)னது பணியாகவே செய்து நிற்க

மலமாயையோடு— ஆணவ மலத்தோடும் மாயாமலத்தோடும் வல்வினையின்று வலியதான கன்ம மலமும் இல்லையாகும்.

(வி-ரை) அவனே என்பவற்றின் 'ஏகாரம்' இரண்டும் மற்றவற்றினின்றும் பிரித்தலால் பிரிநிலைக்கண் வந்தன. யான் எனதென்னும் நினைப்பால் இறைவன் உயிரே யாவன். வேறொன்றும் ஆகான். யான் எனதென்னும் விசேடணங்களான கிஞ்சிஞ்ஞத் வாதிகளையும் ஈசுரனது சர்வஞ்ஞத்வாதிகளையும்விட 'உயிர்' இறைவனேயாதும், வேறொன்றும் ஆகாது. இவ்வுண்மையை உணர்த்தவே இரண்டிடத்தும் ஏகாரம் சேர்க்கப்பட்டுள்ளது. அவ்வழி—அவ்விடத்து—அப்பொழுது தான் இறைவனே என்று உணரும் முன்னர், 'யான்' என்பதைப் பற்றி நின்றமையால் உயிர் ஒரு பொருள் போலவும், ஞானாசிரியர் உபதேசித்த மகாவாக்கிய பிரபாவத்தால் தான் இறைவனை தனது சொரூபமாக வுணர்ந்த பின்னர்யான்என்பதாதி விசேடணங்கள் நீங்கி நின்றமையால் இரண்டு இல்லை என்பதை உணர்த்தவே 'ஏகனாகி' என்றார். பணி — தொழில். ஏகனானபின் வேறு இல்லையானமையால் சொரூப சாக்ஷாத்காரமடைந்த அவ்வுயிர் நின்ற உடம்பின் செயல்களெல்லாம் இறை (குரு) பணியேயாகும். தன் என்பது அசை. பிராரத்த வினைப்பயன் அனுபவிக்கப்பட்டே தீருமென்று சொல்லப்படுகின்றமையால் அதனை வல்வினை என்றார். ஏகாரம் ஈற்றசை.

## கைவல்யம்

தன்னையுந் தனக்கா தாரத் தலைவனையுங்கண் டானேல்
பின்னையத் தலைவன் றானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்
உன்னைநீ யறிந்தா யாகி லுனக் கொருகேடு மில்லை
என்னைநீ கேட்கை யாலே யீதுப தேசித் தேனே

## பிரம கீதை

எப்படியாலும் பண்டு மிப்போது மெப்பொழுதுஞ் சிவ சீவர்க்
கொப்புளதாகு முருவ மொன்றான வுண்மையால் வேறாகு
[தொன்றே
யப்படியுள்ள சிவன் பிறர்போல வவிச்சையானிகழு
[மவ்வவிச்சை
மெய்ப்பரவிச் சையானசித் தொன்றாய் விடுதலெலாப்படைதல்
[வேறன்று

ஆதரத்தோ டவிச்சை நாம மறுத்த நல்லதி காரியைப்
போதமுற்று மெனப்புகன் றது பொய்யிலா மறை யையமன்
றேதமற் றதுநானெ னுந்திட னுவனே யஃதெய்தினு
ஞேதுமுத்தி யவன்றனுன் ளது போகமின்மை னுதிப்பதாம்,

## பகவற் கீதை

இரவிதா னொருவனே யாய்நின் றிந்த வுலகத் தெங்கும்
விரவிய விருளைநீக்கி விளக்குமா றது போல
தரவியா வருமுன் னில்லாச் சராசர வுடம்பு தோறும்
பரவியா னுரைத்த மாயோ னொருவனே பரந்து நிற்பன்

## ஈசுர கீதை

பத்தியினு லியாவர் சிலர் பாவி யென்னைப் பணிகின்றார்
சத்தியமே யவர்க ளுக்குச் சந்நிதி பண்ணு நிற்ப
னித்தமுன் னூரால் வேத விட்டார் களாயற நெறிசே
ருத்தமரா மவரெ னினு மொழிவறவே யுணர் கில்லார்

## வாசிட்டம்

மதியை மேகம்போல் வெண்டலைச் சுதையினை மைபோ
லதிக நன்னெஞ்சை யாசையாம் பேயழ கழிக்கும்
பொதியு மாலெல்லா நீக்கிவன் பவப்பயம் போக்கி
முதிர்ம னத்தின்மால் பிணிப்பறின் முத்திவே றுளதோ

உலகின் பரப்பை யுள்ளாக்கி யுன்னு நினைவுக் கப்பாலாய்க்
கலக மடவார் பொருளென்னுங் காத னழுவி நானென்னுங்
குலவு மிருள்போய் விவேகநிலை கூடு மவனே பானந்த
மிலக வடைந்தோ னெடுங்கால மிவனே துன்ப மில்லாதோன்

நிருவிகற்ப வான்மாவிற் சகதோற்ற மொடுக்கமிவை [நோயில்லை
மருவிகற்ப பேதமுறுப் பராபரமா மப்பொருளை வயங்கக் [கண்டாற்
பெருமனக் கட்டறு மையமறுங் கருமமறு மென்றான் [பெரியோன் வள்ள
லொருகடுகிற் பொன்மேரு புகுவன்றோ பிரமாண்ட [மொடுங்கு மென்றான்

## திருமந்திரம்

கருட னுருவங் கருது மளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோற்
குருவி னுருவங் குறித்தவப் போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே

## திருவாசகம்

முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணஞ்
சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
வத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே

---

## பதினொன்றாம் சூத்திரம்
[ஞாதி பிரஹ்ம ரூபம் ஆதல்]

(அவதாரிகை)

உருவைக் காண விரும்பும் கண்ணுக்கு அக்கண்ணோடு கூடி உருவைக்கண்டு கண் காணும்படி காட்டுகின்ற உயிர்போல தனது எதார்த்த சொரூபத்தை அறிய விரும்பும் உயிருக்கு அவ்வுயிரோடு கூடி இறைவன் குருவாய் சொரூப சாக்ஷாத்காரத்தை உயிர் அடையும்படியாக அறிவித்தலால் குரு அனுக்கிரகம் பெற்ற அவ்வுயிர் அறிவாகிய இறைவனை அடைந்து நிற்கும் என இச்சூத்திரங் கூறுகிறது.

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலி
னயரா வன்பி னரன்கழற் செலுமே

(பதப் பொருள்)

| | |
|---|---|
| காணும் கண்ணுக்கு— கண்டுகாண காட்டும் உளம்போல | (உருவைக்) காண விரும்பும் கண்ணுக்கு (கண்ணோடு கூடி உருவைக்) கண்டு (கண்) காணும்படியாகக் காட்டுகின்ற உயிர்போல |
| காணும் உள்ளத்திற்கு— கண்டு காண காட்டலின் | பிரமா பின்ன ஆன்மாவை (அறிவாகிய இறைவனை) அறிய விரும்பும் உயிருக்கு (இறைவன் குருவாய் அவ்வுயிரோடுகூடி தனது சொரூபத்தை அறிந்து உயிர் சாக்ஷாத்காரத்தை அடையும்படியாக அறிவித்தலால் |
| அயராத அன்பின் — அரன் கழல் செல்லும் | (ஞானசிரியர் அனுக்கிரகம் பெற்ற மாணுக்கனுமுயிர்) தளராத அன்போடு (பிரத்யக்க பின்ன பிரஹ்மத்தை) இறைவனை சுவாநுபூதியால் அடைந்திற்கும் |

(வி—ரை) உள்ளம் என்பதில் ளகர வொற்று விகாரத்தாற் கெட்டுநின்றது. உள்ளம—சிதாபாசனும்புருடன், உயிர் காண என்பதும் உவமானத்தோடும் உவமேயத்தோடும் கூட்டி உரைக்கப்பட்டன. உவமானம் கண் உவமேயம் உயிர். புறப் பொருளைக் கண்ணோடுகூடி உயிர்கண்டு கண்ணுக்குக் காட்டுதல் போல், பிரமவித்து பிரமமே என்னுஞ் சுருதியால் இறைவன் குருவாய் தன்னை உயிரோடுகூடி அறிந்து மாணுக்கனுமுயிருக்கு அறிவிப்பனென்று கூறியவாறு, அவ்வாசிரியானுக் கிரகம் பெற்ற உயிர் அறிவாகிய இறைவனை (பிரத்யக்க பின்ன பிரஹ்மத்தை) சுவாநுபூதி கம்மியமாக வடைந்து சீவன் முத்தனுவன். ஓர் ஆசிரியன் தன் மாணுக்கன் விரும்பும் பொருள்களையெல்லாம் அம்மாணுக்கனுக்குக் காட்டுவனேல் அம்மாணுக்கன் அவ்வாசிரியன்பால் தளராமல் அன்பு செலுத்தி அவனோடுகூடி விடாது உறைதல் போல, இறைவன் குருவாய் உயிரோடு கூடி அவ்வுயிர் அறிய விரும்பும் பொருளாகிய தனது சொரூபத்தை

அறிந்து அவ்வுயிருக்கு அறிவித்தலால் "உயிர்", இறைவனோடு ஐக்கியமாய் நிற்கும் என்று கொள்க. "அயராத" என்பது ஈறு கெட்டு நின்றது. அரன் கழல்—இறைவன் சொரூபம். ஏகாரம் ஈற்றசை.

## கைவல்யம்

நானென வுடலைத் தானே நம்பினே னநேக சன்மம்
ஈனராய்ப் பெரியோ ராகி யிருந்தவை யெலாம்ப் போது
கானலில் வெள்ளம் போலக் கண்டுசற் குருவி னாலே
நானென வென்னைத் தானே நம்பியீ டேறி னேனே

## பிரம கீதை

காட்சியை யெல்லாங் கண்ணதாய்க் கரைத்துக்
கண்ணெழிந்தொரு பொருளில்லா
மாட்சியை யளிக்க வல்லவன் குருவா மாரிபோன்
மாறுவேண்டாதே
மீட்சியில் பதத்தைக் கருணையா லளிக்கும் வித்தகக்
குரவனேயெவருந்
தாழ்ச்சிசெய் தேத்தற் குரியதத் துவமாஞ் சங்கர
னென்றிடத்தகுவான்

## பகவற் கீதை

விழியாமென வறிவாலறி வுறுவார் விழி வசமே
வழிபாடுசெய் தவர்சேவடி மலர்சூடிட வவரே
யொழியாதெவர் களுமியாவையு மொருநீயென
திடையென்
றழியாவகை யதுவாவதொ ரறிவேயரு ளுவரால்

## ஈசுர கீதை

ஒப்பதுமிக் கதுகுறைந்த வொன்றுதனை யொழித்தில்லா
தெப்பொருளெவ்வெளிகட்கு மெவ்வெளி தா னொளியாகுஞ்
சிற்பரமாகாயத் தேதி கழ்கின்றவது தெளிந்த
வப்பெரியோ னனந்தமாய்ப் பிரமமா கின்றான்

## கைவல்யம்

தன்னையுந் தனக்கா தாரத் தலைவனையுங்கண் டானேல்
பின்னையத் தலைவன் றானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்
உன்னை நீ யறிந்தா யாகி லுனக் கொருகேடு மில்லை
என்னை நீ கேட்கை யாலே யீதுப தேசித் தேனே

## பிரம கீதை

எப்படியாலும் பண்டு மிப்போது மெப்பொழுதுஞ் சிவ சீவர்க்
கொப்புளதாகு முருவ மொன்றான வுண்மையால் வேறா
[தொன்றே
யப்படியுள்ள சிவன் பிறர்போல வவிச்சையானிகழு
[மவ்வவிச்சை
மெய்ப்பாவிச் சையுரனசித் தொன்றாய் விடுதலொப்படைதல்
[வேறன்று

ஆதாரத்தோ டவிச்சை நாம மறுத்த நல்லதி காரியைப்
போதமுற்று மெனப்புகன் றது பொய்யிலா மறை யையமன்
றேதமற் றதுநானெ னுந்திட னவனே யஃதெய்தினு
ஞேதுமுத்தி யவன்றனுள் ளது போகமிங்கு னுதிப்பதாம்,

## பகவற் கீதை

இரவிதா னொருவனே யாய்நின் றிந்த வுலகத் தெங்கும்
விரவிய விருளை நீக்கி விளக்குறு மாறு போல
தாவியா வருமுன் னில்லாச் சராசர வுடம்பு தோறும்
பரவியா னுரைத்த மாயோ னொருவனே பார்த் திற்பன்

## ஈசுர கீதை

பத்தியி னாலியாவர் இலர் பரவி யெனைப்] பணிகின்றார்
சத்தியமே யவர்களுக்குச் சந்நிதி பண்ணுகிற்ப
னித்தமுன் னால் வேத விட்டர் களாயற நெறிசே
ருத்தமரா மவரெ னினு மொழிவறவே யுணர் கில்லார்

## வாசிட்டம்

மதியை மேகம்போல் இவ்வுடலச் சுதையினை மைபோ
லதிக நன்னெஞ்சை யசனையசம் பேயழ கழிக்கும்
பொதியு மாலெலா நீக்கிவன் பவப்பயம் போக்கி
முதிர்ம நத்தின்மால் பிணிப்புறின் முத்திமே லுளதோ

உலகின் பாப்பை யுள்ளாக்கி யுன்னு கினைவுக் கப்பாலாய்க்
கலக மடவார் பொருளென்னுங் காத லழுவி நானென்னுங்
குலவு மிருள்போய் விவேகநிலை கூடு மவனே பரானந்த
மிலக வடைந்தோ னெடுங்கால மிவனே துன்ப மில்லாதோன்

திருவிகற்ப வான்மாவிற் சகதோற்ற மொடுக்கமிவை [நோயில்லை
மருவிகற்ப பேதமுறாப் பராபரமா மப்பொருளை வயங்கக் [கண்டாற்
பெருமனக் கட்டறு மையமறுங் கருமமறு மென்றான் [பெரியோன் வள்ள
லொருகடுகிற் பொன்மேரு புகுவன்றோ பிரமாண்ட [மொடுங்கு மென்றான்

## திருமந்திரம்

கருட னுருவங் கருது மளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோற்
குருவி னுருவங் குறித்தவப் போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே

## திருவாசகம்

முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணஞ்
சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
வத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே

---

## பதினொன்றாம் சூத்திரம்

[ஞானி பிரஹ்ம ரூபம் ஆதல்]

(அவதாரிகை)

உருவைக் காண விரும்பும் கண்ணுக்கு அக்கண்ணோடு கூடி உருவைக்கண்டு கண் காணும்படி காட்டுகின்ற உயிர்போல தனது எதார்த்த சொரூபத்தை அறிய விரும்பும் உயிருக்கு அவ்வுயிரோடு கூடி இறைவன் குருவாய் சொரூப சாக்ஷாத்காரத்தை உயிர் அடையும்படியாக அறிவித்தலால் குரு அனுக்கிரகம் பெற்ற அவ்வுயிர் அறிவாகிய இறைவனை அடைந்து நிற்கும் என இச்சூத்திரங் கூறுகிறது.

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலி
னயரா வன்பி னரன்கழற் செலுமே

(பதப் பொருள்)

| | |
|---|---|
| காணும் கண்ணுக்கு— | (உருவைக்) காண விரும்பும் கண்ணுக்கு |
| கண்டுகாண காட்டும் | (கண்ணோடு கூடி உருவைக்) கண்டு |
| உளம்போல | (கண்) காணும்படியாகக் காட்டுகின்ற உயிர்போல |
| காணும் உள்ளத்திற்கு—<br>கண்டு காண<br>காட்டலின் | பிரமா பின்ன ஆன்மாவை (அறிவாகிய இறைவனை) அறிய விரும்பும் உயிருக்கு (இறைவன் குருவாய் அவ்வுயிரோடுகூடி தனது சொரூபத்தை அறிந்து உயிர் சாக்ஷாத்காரத்தை அடையும்படியாக அறிவித்தலால் |
| அயராத அன்பின் —<br>அரன் கழல்<br>செல்லும் | (ஞானசிரியர் அனுக்கிரகம் பெற்ற மாணுக்கனுமுயிர்) தளராத அன்போடு (பிரத்யக்க பின்ன பிரஹ்மத்தை) இறைவனை சுவாநுபூதியால் அடைந்திற்கும் |

(வி—ரை) உள்ளம் என்பதில் ளகர வொற்று விகாரத்தாற் கெட்டு நின்றது. உள்ளம்—சிதாபாசனும்புருடன், உயிர் காண என்பதும் உவமானத்தோடும் உவமேயத்தோடும் கூட்டி உரைக்கப்பட்டன. உவமானம் கண் உவமேயம் உயிர். புறப் பொருளைக் கண்ணோடுகூடி உயிர்கண்டு கண்ணுக்குக் காட்டுதல் போல், பிரமவித்து பிரமமே என்னுஞ் சுருதியால் இறைவன் குருவாய் தன்னை உயிரோடுகூடி அறிந்து மாணுக்கனுமுயிருக்கு அறிவிப்பனென்று கூறியவாறு, அவ்வாசிரியானுக் கிரகம் பெற்ற உயிர் அறிவாகிய இறைவனை (பிரத்யக்க பின்ன பிரஹ்மத்தை) சுவாநுபூதி கம்மியமாக வடைந்து சீவன் முத்தனுவன். ஓர் ஆசிரியன் தன் மாணுக்கன் விரும்பும் பொருள்களை யெல்லாம் அம்மாணுக்கனுக்குக் காட்டுவனேல் அம்மாணுக்கன் அவ்வாசிரியன்பால் தளராமல் அன்பு செலுத்தி அவனோடுகூட விடாது உறைதல் போல, இறைவன் குருவாய் உயிரோடு கூடி அவ்வுயிர் அறிய விரும்பும் பொருளாகிய தனது சொரூபத்தை

அறிந்து அவ்வுயிருக்கு அறிவித்தலால் "உயிர்", இறைவனோடு ஐக்கியமாய் நிற்கும் என்று கொள்க. "அயராத" என்பது ஈறு கெட்டு நின்றது. அரன் கழல்—இறைவன் சொரூபம். ஏகாரம் ஈற்றசை.

## கைவல்யம்

நானென்ன வுடலைத் தானே நம்பினே னநேக சன்மம்
ஈனராய்ப் பெரியோ ராகி யிருந்தவை யெலாமிப் போது
கானலில் வெள்ளம் போலக் கண்டுசற் குருவி னாலே
நானென வென்னைத் தானே நம்பியீ டேறி னேனே

## பிரம கீதை

காட்சியை யெல்லாங் கண்ணா தாய்க் கரைத்துக்
கண்ணொழிந்தொரு பொருளில்லா
மாட்சியை யளிக்க வல்லவன் குருவா மாரிபோன்
மாறுவேண்டாதே
மீட்சியில் பதத்தைக் கருணையா லளிக்கும் வித்தகக்
குரவனேயெவருந்
தாழ்ச்சிசெய் தேத்தற் குரியதத் துவமாஞ் சங்கர
னென்றிடத்தகுவான்

## பகவற் கீதை

விழியாமென வறிவாலறி வுறுவார் விழி வசமே
வழிபாடுசெய் தவர்சேவடி மலர்சூடிட வவரே
யொழியாதெவர் களுமியாவையு மொருநீயென
திடையெல்
றழியாவகை யதுவாவதொ ரறிவேயரு ளுவரால்

## ஈசுர கீதை

ஒப்பதுமிக் கதுகுறைந்த தொன்றுதனை யொழித்தில்லா
தெப்பொருளெவ்வொளிகட்கு மெவ்வொளிதா னொளியாகுஞ்
சிற்பரமாகாயத் தேதிகழ்கின்றவது தெளிந்த
வப்பெரியோ னனந்தமாய்ப் பிரமமா கின்றான்

## வாசிட்டம்

மெய்யான பொருளுடையவாக்கியத்தின் மெய்ப்பொருளால்
முன்னொடு பின்விரோத மின்றிக்
கையாரு நெல்லியெனக் காட்டவல்ல கட்டுரையே யாமிங்கு
கழறிற் றெல்லா
மெய்யான ஞானவிழி வெளியாய்ப்போதம் விரியவுதித்
தாலென் சொன்னனும் வித்தைக்
கையார வலிதெளிதென் றுள்ளவாறு கலக்கமற நிலை நின்று
காண்டியன்றே

பேதமுறு புந்தியே மாயையாகும் பெரிதுவருந் தியுமிதனைப்
போக்கல் வேண்டும்
போதமுறு பேற்றினாலன்றி மாயைப் பொருநதியின்
கரை தோன்றாப் பொருந்த தோன்றி
லேதமறு மப்பதமே யிறவாவீடா மிம்மாயை பிறப்பிடமே
யென்னை வேண்டாஞ்
சேதமுறக் கொல்வழியே தென்று தேர்வாய் சிதைவுற்று
விதனியல்பு தெரியுமன்றே

தண்டுலத் தோலுஞ் செம்பினிற் களிம்புஞ் சம்பந்தந்
தொழில் விசேடத்தால்
விண்டுபோ மதுபோற் புருடனு மலத்தை மேவியே
யொக்குத லியலுங்
கொண்டசந்தேக மொழித்துநீ முயல்வாய் குருவின் வல்லப
விளக்கத்தாங்
கண்டன மெனல்வீணாகுநீ தானுங் கண்டன பரம்
பொருட் பொலிவே

## திருமந்திரம்

முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்கா
ளகத்திற் கண்கொண்டு பார்ப்பதே யானந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லெனிற் சொல்லுமா றெங்ஙனே

## தேவாரம்

*பனைக்கை மும்மத வேழமுரித்தவன்*
*நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவ*
*னனைத்தும் வேடமா மம்பலக் கூத்தனை*
*தினைத்தனைப் பொழுதும் மறந் துய்வனே*

---

## பன்னிரண்டாம் சூத்திரம்

*[பிரஹ்ம ஞான சாதனம்]*

### அவதாரிகை

உயிர் சிவ (பிரமான்ம) ஞானத்தைப் பெறுதற்குச் சாதனமாயுள்ள சாது சங்கத்தைச் சேர்ந்தும் அவர்களது வேடத்தையும், பிரதிமைகளமைக்கப்பட்ட ஆலயங்களையும் இறைவனென்றே தொழும் என இச்சூத்திரங் கூறுகிறது

செம்மலர் நோன்றாட் சேர லோட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே

(பதப்பொருள்)

*செம்மலர் நோன்றாள்* — (உயிர்) செந்தாமரை மலர் போன்ற அழகும் மேம்பாடும் வாய்ந்த (இறைவன்) திருவடிகளை (சொரூபத்தை)

*சேரல் ஒட்டாத* — அடைய வொட்டாமல் தடுத்த

*அ மலம் கழீஇ* — அந்த ஆணவமலத்தை (இறைவன் ஞான நீராற் கழுவிக்) களைந்து

*அன்பரொடு மரீஇ* — (பிரத்யக்க பின்ன பிரஹ்ம சாக்ஷாத்காரமடைந்திருக்கின்ற) அன்புடையவர்களோடு கூடி

*மால்அறநேயம் மலிந்து* — மயக்கம் அற மனத்தில் அன்பு நிறைந்தும்

*அவர் வேடமும்* — அவ்வடியார்களது வேடங்களையும்

ஆலயமும் — (இறைவனைத் தொழுதற்காக ஆங்காங்கு அமைக்கப்பட்டுள்ள) ஆலயங்களையும் (பிரதிமைகளையும்)

அரன் எனத் தொழும் — பரசிவமாகவே கண்டு வணங்கும்

(வி-ரை)

"செம்மலர் நோன்றாள்" என்பது உபசாரம். இறைவன் சொரூபமே. இறைவனைச் சேர வொட்டாமல் தடுத்தது உடல் பொறியாதிகளில் "யான்" என்றும் மனைவிமைந்தாதியரிடத்து எனது என்றும் அபிமானிக்கும் ஆணவமல மேயாகலான், அதனை "அம்மலம்" என்று சுட்டிக் கூறினர். சாது சங்கம் அறக் குறைவை நிறைவாக்கு மாபத்தைச் சம்பத்தாக்கு மென்பார் "அன்பரொடு மரீஇ" என்றும், நிட்காமவினை பஞ்சாக்ஷர ஜெப (சிரவணமனன)நியானாதிகளாலேயே ஐயந்திரிபு(மலவிக்ஷேபம்) நீங்குமென்பார் "மாலற" என்றும். குருதான். இறைவனிடத்து ஆதரவு இல்லையாயின் பயன் அடையப்படா தென்பார் "நேயம் மலிந்து என்றும், சிவனடியார்களுடைய (சந்நியாச) வேடத்தையும் இறைவனுக்கு (ஞானிகளுக்கு) ஆங்காங்கு அமைக்கப்பட்டுள்ள (பிரதிமைகளையும்) ஆலயங்களையும் இறைவனே என்று கொண்டு தொழவேண்டு மென்பார் "அவர் வேடமுமாலயந்தானுமரனெனத்தொழும்" எனவுங் கூறினர். சுருதி நாராயணனுக்குச்சலம், அசலம் என இரண்டு வடிவம் என்கின்றது. சந்நியாசிகள் சலவடிவம் பிரதிமை அசலவடிவமாம். "தான்" அசை "ஏகாரம்" ஈற்றசை

## திருவாசகம்

உடையாளுன்ற னடுவிருக்கு முடையாணடுவு ணீயிருத்தி
யடியே னடுவு ளிருவீரு மிருப்ப தானு லடியேனுன்
னடியார் நடுவு ளிருக்குமரு ளைப்புரியாய்ப் பொன்னம்
பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து முடியு வண்ண முன்னின்றே

## பிரம கீதை

பரமாத்துவித ஞானியே பரதேவதை தானவனேயித்
திரமாமுத்தி யானிங்குச் செப்பும் பொருள் செய்வினையாலும்
உரமார்ந்ததீசி கௌதமனு லுண்டாஞ் சாபவுரையாலும்
காமாமனிதர் நெஞ்சதனிற் காதல்செய்யாதொருகாலும்

வேளுடல் பொடிபட விழித்த விண்ணவற்
காளெனு மன்பினு லணியு நீற்றையுத்
தூளனம் பண்ணலாற் றொழுது போற்றலான்
மாளுதல் பிறத்தலாம் வழியை மாற்றலாம்.

உடம்புடனிருந்தே யுடம்பிலா வுண்மையுணர்ந்தவனுளத்
தொரு பொருளும்
விடம்பிடு காமவெகுளி மேவாது விளம்பிடும் பொருளெலாம்
விளக்கு
மிடம்படு மிதயாகா சமற்றிதுவே பிறப்பொடு பிறப்பில
தென்றுந்
திடம்படு பிரமமாவது மான்மா வாவதுந் தேகிகட்
கெல்லாம்

## பகவற் கீதை

மானமும் பிறர்தனை மதிக்கப் பண்ணலு
மூனமும் பிறவுயிர்க் குறுகண் செய்கையும்
யானெனுஞ் செருக்கு மிவ்விக பரங்களி
லானபே ராசையோ டறுக்கு மாற்றலும்

பெற்றதன் மனையொடு பெண்டிர் பாலர்பா
லுற்றெழு மவாவிட லுடம்பின் றூய்மையு
மற்றவைம் பொறிகளில் வாயில் வாழ்க்கையுஞ்
செற்றமுஞ் சிறியவர் குழுவுந் தீர்தலும்

ஒருபெரும் பொருளையே யுளத்துள் வைத்தலு
மிருவினை கடப்பவ ரிடங்க ளெய்தலுங்
குருவினை வழிபடு குணமுங் குற்றமி
லுருவினை யுள்ளவா றுணரு முண்மையும்

முன்றிகழ் பிறப்பொடு மூப்பி றப்பினுற்
சென்றடை யிடும்பையைச் சிந்தை செய்கையு
மென்றிவை, யனைத்துமற் றிவற்றினு வினிச்
சென்றடை பொருளினைத் தெரிந்து கேளுறு.

## ஈசுர கீதை

சந்ததம் வேதமியாவையும் பரமாச் சாற்றவும் படுவதிங் கெனையே
அந்தண ரெல்லாம் வேள்வியினலும் அங்கியிற் போற்றுவ தெனையே
எந்த லோகத்தும் பிதாமகன் முதலாமியாவரு மிறைஞ்சுவ தெனையே
சிந்தையை யொருக்கி யோகிகளுளத்தே தியானமுற்றிருப்பது மெனையே

## வாசிட்டம்

மேவுறு துன்பப் பெருஞ்சுமை சுமந்து மீட்சிபோக்கிலை யுடற் புண்ணு
யீவறு பிறவிக் குழியில்வீழ் சீவ வெருத்தினை யிக் குழி நின்று
மோவலில் முயல் வாலெடுப் பதேவலியாமுயர்ந்த ஞாநிகளுற வுளதே
ஞவிகர் நாவாய் தருவபோலூக நல்குவர் பவக்கடல் கடக்க

எவ்விடத்தில்லை நல்லஞா நிகளா மீர்ங்கனி மலர்குளிர் சோலை
யவ்விடங் கானன் மேடதா மாங்கே யமர்பவ ரறிவிலா ரன்றோ
கவ்விய செல்வ நட்புறால் சுற்றங் கருமமா திகளெலா முதவா
செவ்விய மனமே யுதவுறல் வேண்டுஞ் சீவனைச் செல்கதி யேற்ற

செறிபார் முழுதாள் பவன்பதமுந்திரண மென்னப் பரமபதம்
வெறிதே யிருக்கு மிருப்பினல் மேவு மன்றே பேரூர்க்கு
நெறிபோம் பதிகன்றனக் கிருதா ணினையா திருக்க நடப்பது போற்
பொறிகூர் தனதுதொழி னடக்கும் பூணு வாளா விருந்திடவே

இங்குப் பன்னும் பலவாலெனியம்பு சுருக்க மிதுகேளாய்
சங்கற் பந்தான் பவபந்தஞ் சங்கற் பந்தீர்ந் தது முத்தி
பங்கற் றெல்லை யழிவலைவு பவமற் றுறு மறி வுருவே
துங்கச் சகங்க ளெனநோக்கிச் சுகமெய்ப்படி யப்படியிருப்பாய்

## திருமந்திரம்

படமாடக் கோயிற் பரமற் கொன்றீயி
னடமாடக் கோயி னம்பர்க் கங்கா
நடமாடக் கோயி னம்பர்க் கொன்றீயிற்
படமாடக் கோயிற் பரமற் கங்காமே







மினர்வா பிரிண்டர்ஸ், மதுரை:—57.

# பிழையும் திருத்தமும்

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 2 | 3 | விககி | விக்கி |
| 9 | 3 | காரஞ | காரஞ் |
| | 21 | மாத்தில் | மாத்தில் |
| 10 | 15 | சழுத்தியில் | சுழுத்தியில் |
| 16 | 5 | யென்றுங | யென்றுங் |
| 19 | 30 | யுக்ருகு | யுருக்கு |
| 21 | 7 | இறைனது | இறைவனது |
| | 10 | உணர் | உணர் உரு |
| 25 | 26 | இலக்ஷனை | இலக்ஷணை |
| 27 | 29 | குருவமாய் | குருவுமாய் |
| 28 | 19 | | சர்வஞ்ஞத்வாதி |
| | 31 | ஐயம் | ஐம் |
| 29 | 19 | மூன்றுமாகும் | மூன்றாகும் |
| | | அவ்வில் | அவ்வில |
| 32 | 17 | நீஙக | நீங்க |
| | 21 | ஞானநம் | ஞானம் |
| 33 | 21 | செயயய | செய்ய |
| 36 | 10 | கர்த்திருதவ | கர்த்திருத்வ |
| 44 | 9 | பிறப்பொடு | யிறப்பொடு |
| | 19 | லுத்றெழு | லுற்றெழு |
| | 21 | குழுவங் | குழுவுங் |

46

சிவஞான போதம் வேதாந்தப்
பிரகாச மென்னும் உரை முற்றிற்று
சர்வஞ்சின்மயம்

## முகவுரை

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | 6 | மளங்கழிய | மனங்கழிய |
| | 28 | லோப்பரிய | லொப்பரிய |
| 2 | 10 | பாண்டியப் | பாண்டிப் |
| | 29 | முதலியவறிற் | முதலியவற்றிற்கு |
| 3 | 12 | அறிய | நறிய |
| | 19 | இங்ஙனம | இங்ஙனம். |

---

